

# ஆனந்த போதினி

# ANANDA BODHINI.

Vol. 29. பொருளடக்கம். No. 9.

சுபானு வருஷம் பங்குனி மீ ௧௨

உள்ளடக்கம். பக்கம்.











# எழுத்து ஓவியங்கள்

## யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்?

விலை ரூ. 1.

(விதவைப் பெண்ணொருத்தியின் உள்ளம் உருக்கும் கதை)

### திருத்தமான இரண்டாம் பதிப்பு

'சாரதா வித்யாலயா' தலைவி சகோதரி ஆர். எஸ். சுப்புலட்சுமி, பி. ஏ., எல். டி., பண்டிதை அசலாம்பிகை ஆகியோர் சிறப்புரைகள் கொண்டது.

இக் கதையில் வரும கதாநாயகி காமாட்சியின் சித்திரம் தமிழ்ச் சமூகத்தில் நிலவிவரும் வைதவ்யத்தின் சித்திரமாகும்.

## உயிரோவியம்

இதுகாறும் தமிழ் அன்னையின் திருமேனியிலேயே கிடையாத ஒரு எழில் வாய்ந்த ஆபரணம் என்றும், இதுவரை எந்த கதாசிரியராலும் காணாத முடிவு என்றும் ஒரு முறையல்ல; பலமுறை படித் தின்புற வேண்டிய கதை என்றும் அறிஞர்கள் இக் கதைச் சிறப்பைப் பாராட்டி யிருக்கிறார்கள். இக் கதையில் சிருஷ்டிக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு பாத்திரமும் நம் கண்முன்னே நடமாடுவது போன்ற உணர்ச்சி படிப்போர்க்கு ஏற்படும். இதன் விலை அணா 12.

## இவ்வுலகைத் திரும்பிப்பாரேன்?

செல்வக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்து சீமைப்படிப்பு படித்து நவநாகரிக வலையில் சிக்கிச் சீர்கேடுற்று வாழ்க்கையில் ஏற்பட்ட பல கஷ்ட நஷ்டங்களால் உலகையே வெறுத்துச் சென்ற ஒரு பெண்மணியின் சுயசரிதம் உள்ளத்தைக் கவரும் வகையில் வரையப்பட்டிருக்கிறது.

இதன் விலை அணா 14.

## சீமாட்டி கார்த்தியாயினி

ருஷிய ஞானி லியோ டால்ஸ்டாய் எழுதிய "அன்னாகாரினென்னா" என்னும் நவீனத்தைத் தமிழில் இனிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது.

இதன் விலை அணா 12.

## காதலனா? காதகனா?

கலாசாலை மகளிர் சிலரின் சீர்கெட்ட வாழ்க்கையும் போலி நவநாகரிகத்துக்கு அவர்கள் பலியாகி அடையும் கதியையும் இக் கற்பனைக் கதை படம் பிடித்துக் காட்டுகிறது. இதன் விலை அணா 10.

---

ஆனந்தபோதினி காரியாலயம், சௌகார்பேட்டை, சென்னை.

# ஆனந்தபோதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்[illegible]அறிவு."—திருவள்ளுவர்.

| தொகுதி 29 | சுபானு[illegible] பங்குனிமீ ௧௳ <br> 1944௵ [illegible]ர்ச்சுமீ 14௳ | பகுதி 9 |
|---|---|---|

## கடவுள் வணக்கம்.

ஒடுங்கும் பிணிபிறவி கேடுஎன்று இவை
உடைத்தாய வாழ்க்கை ஒழியத் தவம்
அடங்கும் இடம்கருதி நின்றீர் எல்லாம்
அடிகள் அடிநிழற் கீழ்ஆளாம் வண்ணம்
இடங்கு மதிலும் சுலாவி எங்கும்
கெழுமனைகள் தோறும் மறையின் ஒலி
தொடங்கும் கடந்தைத் தடங்கோயில் சேர்
தூங்கானை மாடம் தொழுமின் களே. (1)

பிணிநீர சாதல் பிறத்தல் இவைபிரியப்
பிரியாத பேரின்பத் தோடு
அணிநீர மேலுலகம் எய்தல் உறில்
அறிமின் குறைவில்லை ஆன்ஏறு உடைட்
மணிநீல கண்டம் உடைய பிரான்
மலைமகளும் தானும் மகிழ்ந்து வாழும்
துணிநீர்க் கடந்தைத் தடங்கோயில் சேர்
தூங்கானை மாடம் தொழுமின் களே. (2)

சாநாளும் வாழ்நாளும் தோற்றம் இவை
சலிப்பாய வாழ்க்கை யொழியத் தவம்
ஆமாறு அறியார் அலமந்து நீர் அயர்ந்தும்
குறைவில்லை ஆன்ஏறு உடைப்
பூமாண் அலங்கல் இலங்கு கொன்றை
புனல் பொதிந்த புன்சடையி[illegible] உறையும்
தாமாண் கடந்தைத் தடங்கோயி[illegible] சேர்
தூங்கானை மாடம் தொழு[illegible]களே. (3)




# திருமண சட்டத்துக்குத் திருத்தம்

நம் இந்து சமூகத்தில் நீண்ட காலமாக நடந்துவந்த பல தார மணத்தை எதிர்த்துச் சில ஆண்டுகளாகவே கிளர்ச்சி செய்யப்பட்டு வந்தது அனைவரும் அறிந்த விஷயம். அப் பல தார மணத்தை முக்கியமாக ஒழிக்கும் நோக்கத்துடனேயே சட்ட பூர்வமாக இந்து திருமணத்தைத் திருத்தி யமைக்க இந்தியா சட்டசபை யங்கத்தினர்கள் சிலர் முயன்று சென்ற ஆண்டில் பிரேரணை யொன்று கொண்டுவந்ததும், அதை ஆதரிக்கும் வகையில், "பல தார மணம் அவசியமா?" என்ற தலைப்போடு தலையங்க மொன்று நாம் எழுதியிருந்ததும் வாசகநேயர்களுக்கு நினைவிருக்கும் என்று நம்புகிறோம். அதைத் தொடர்ந்து, இவ்வாண்டு தொடக்கக் கூட்டமாக நடந்துவரும் இந்தியா சட்டசபைக் கூட்டத்தில், திருமண சம்பந்தமாக, இந்து சட்டத்தைத் திருத்தியமைப்பதற்காக வென்று பிரரேபிக்கப் பட்டிருக்கும் மசோதாவை மத்திய சட்டசபை, அரசாங்க சபை ஆகிய இரு சபைகளும் சேர்ந்த கூட்டுக் கமிட்டியின் ஆலோசனைக்கு விடுதல் வேண்டுமென இந்திய சர்க்கார் சட்ட மெம்பரான ஸர், அசோக குமார ராய் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார்.

சட்ட மெம்பரின் இத் தீர்மானத்தை மட்டுமல்ல; திருமண சம்பந்தமாக இந்து சட்டத்தைத் திருத்தி யமைக்க வேண்டுமென்ற மூல மசோதாவையே பலமாக எதிர்த்துப் பேசினார் ஸ்ரீ பைஜநாத் பஜோரியா என்பவர். 'இவ்விதம் ஒரு மசோதா கொண்டு வருவதற்கே இப்போது அவசிய மில்லை' என்று கண்டிப்பாகக் கூறலானார், "மதாசாரப்படி நடக்கும் திருமணத்துக்குச் சமமானதாக ஸிவில் திருமணத்தையும் செய்துவிட வேண்டுமென்று முயற்சி செய்யப்படுகிறது. இதன் மூலம் சிவில் திருமணமுறை அங்கீகரிக்கப்படுகிறது. இப்போது இந்த விசேஷத் திருமணச் சட்டப்படி எந்த இந்துவாவது திருமணஞ் செய்துகொண்டால், அப்படித் திருமணஞ் செய்து கொண்டவன் இந்துவாக இருக்க முடியாமல் போவதுடன்,

அவன் சாதிப்பிரஷ்டனுகவும் ஆகிவிடுகிருன் என்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன். உண்மையான இந்து, மதாசாரப்படி நடக்கும் திருமணத்தைத் தான் அங்கீகரிப்பான். இந்த நிலையில் இந்த இருவகையான திருமண முறைகளையும் ஒரே சமானமாகக் கருதுவதென்ருல், இந்தச் செயலை நான் சிறிது கூட ஏற்றுக் கொள்ள முடியாது. இந்த மசோதாவின் முக்கிய நோக்கம் என்னவென்ருல், விசேஷத் திருமணச் சட்ட விதிகளின்படி திருமணம் செய்து கொண்டிருப்பவர்கள் இது காறும் அடைந்து வந்த தொந்தரவுகள், தடைகள், இழிவு களங்கங்களை ஒழிப்பதே யாகும். இதற்கு அடுத்த படியாக, இன்னும் 10-வருஷங்களுக்குப் பின், மதாசாரத் திருமண முறையே அடியோடு மறைந்துவிட வேண்டுமென்று கனம் சட்ட மெம்பர் ஒரு மசோதா கொண்டு வருவார்." என்று கண்டித்து தம் கட்சிக்கு ஆதாரமாக, "திருமணம் என்பது மிகப் புனிதமானது; மதத் தொடர்புடையது; இத்தகைய திருமண விஷயத்தை நீதிமன்றங்கள் தீர்த்து வைப்பதென்ருல், இதைவிட, ஒரு நல்ல வேலை என்ன வென்ருல், இந்து திருமணச் சட்டங்கள் அனைத்தையும் வாபஸ் பெற்று ரத்து செய்துவிட்டு, எல்லா இந்துக்களும் கிறிஸ்தவச் சட்டப்படி தான் திருமணஞ் செய்து கொள்ளுதல் வேண்டுமென்றும், இனிமேல் கிறிஸ்தவச் சட்ட திட்டங்களின்படி தான் ஆளப்படுவார்களென்றும் ஓர் அவசரச் சட்டத்தை நிறைவேற்றி வைத்துவிடுவதுதான்" என்று கூறி முடித்தார்.

இவ்வளவு குறுகிய மனேபாவத்தோடு பேசிய ஸ்ரீ பனெர்ஜியா, "பெண்மணிகளின் நலன்களை நாடி அவர்களுடைய குறைகளைப் போக்க உழைப்பவர்களுள் நான் முதன்மையானவன்" என்று கூறிக் கொள்வது நமக்கு வியப்பைத் தருவதோடு விநோதமாகவும் இருக்கிறது. "பல தார மணத்தை ஒழிக்க வேண்டுமென்பதை நான் ஆதரிக்கிறேன்" என்பதும் நமக்கு மேலும் ஆச்சரியத்தைத் தருகிறது. இவருக்கு விஷயத் தெளிவு இல்லை என்பது, "நான் பல தார மணத்தைக் கண்டிக்கையில், இந்த மசோதாவானது இத்தகைய திருமணங்களை ரத்து செய்யும் அளவுக்கு அதிகத் தொலைவு போய் விட்டதென்றே நான் கருதுகிறேன். இந்தத் திருமணங்கள் ரத்து செய்யப்பட்டால் இதனுல், கஷ்டப்படப் போகிறவர்கள் பெண்மணிகளே யாவார்கள்..........பெண்மணிகள் நல்ல மனைவிகளாகவும் நல்ல தாய்மார்களாகவும் விளங்கி மோட்ச மடைய வேண்டுமென்றே நான் விரும்புகிறேன்" என்று முன்னுக்குப் பின் முரணுகப் பேசியிருப்பதிலிருந்து அறியலாம்.

ஸ்ரீ பஜோரியாவுக்குச் சாட்டை கொடுத்திருக்கிறார் ஸ்ரீமதி ரேணுகா ரே என்னும் பெண் அங்கத்தினர். அவ்வம்மையார் மேற்படி மசோதாவை ஆதரித்துப் பேசும் முறையில், "ஒரு சில ஒழுங்கீனங்களும் விதிவிலக்குகளும் மட்டும் தான் இது சம்பந்தப்பட்ட வரையில் சரி செய்யப்பட்டிருக்கின்றனவே யொழிய, வேறு எத்தகைய மாறுதலும் சிவில் திருமணச் சட்டத்தில் செய்யப்பட்டில்லை. சிவில் திருமணச் சட்டப்படி திருமணஞ் செய்து கொண்டவர்கள் இந்துக்களாக இருக்க முடியாதென்றும் சாதிப் பிரஷ்டர்களாகிவிடுவார்களென்றும் ஸ்ரீ பஜோரியா கூறியது சிறிதும் பொருத்தமன்று. இந்திய சர்க்காரின் அட்வொகேட் ஜெனரல் ஸர். பி. எல். மித்தர் கூட விசேஷத் திருமணச் சட்டப்படி திருமணஞ்செய்து கொள்ளும் இந்துக்கள் இந்துக்களாகவே இருக்கின்றனர் எனக் கூறியிருக்கிறார். இம்மசோதாவில் மதாசாரப்படி நடக்கும் திருமணங்களுள் முதன்மையாகக் கவனிக்கப் பட்டிருப்பது ஒரே தார மணத்தைக் கட்டாயப் படுத்துவதாகும். இதை நான் முழுமனதுடன் ஆதரிக்கிறேன். இந்து சமூகத்தில் பலதார மணம் என்பது அருமையாகத்தானிருக்கிறது. ஆனால், இப்போது அமுலிலிருந்து வரும் சட்டத்தில் பல தார மணத்தைத் தடைசெய்ய முடியாதபடி சிக்கல் இருந்து வருகிறது. ஆண்கள் இதனைத் தங்களுக்குச் சாதகமாக உபயோகித்துக் கொள்ள இப்போதுள்ள சட்டப்படி வழி ஏற்பட்டு விடுகிறது. பெண்மணிகளோ தங்களுக்கு ஏற்படும் குறைகளை நீக்குமாறு நீதி மன்றத்துக்குச் செல்லவேண்டியிருக்கிறது. இச்சபையின் அங்கத்தினர்கள் தங்களுடைய சகோதரிகளுக்கோ குமாரத்திகளுக்கோ இத்தகைய நிலைமை நேருவதைச் சகித்துக் கொண்டிருப்பார்களா என்று கேட்கிறேன். இனி மேலும், இத்தகைய கொடிய அநீதியை இந்து சமுதாயம் சகித்துக் கொண்டிருக்க முடியுமா? என்றுதான் கேட்கிறேன். சாதித் தடைகள், சாதி உயர்வு, தாழ்வு வேறுபாடுகள் அனைத்தும் அடியோடு என்றைக்கும் தலைகாட்டாதபடி ஒழித்து விடுதல் வேண்டும். இச்சாதி வேற்றுமைகளும் கட்டுப்பாடுகளும் அடியோடு ஒழிக்கப் பட்டால்தான் சமுதாயம் பொருளாதாரத் துறையில் வளர்ச்சியடைந்து உயர்வு பெறுதற்கு இயலும். ஜனநாயகக் கருத்துகள் இந் நாட்டில் வளர்ச்சி பெறுதற்கு முடியும். இந்துச்சட்டம் என்பது காலத்திற்கு ஏற்றபடி மாறுதல் அடைந்து கொண்டுதான் வந்திருக்கிறது" என்று கூறியிருப்பது போற்றத்தக்கது. ஸ்ரீமதி ரேயின் அறிவுரை ஸ்ரீ பஜோரியா போன்றவர்களுக்கு அறிவுத் தெளிவையும் விசால மனோபாவத்தையும் உண்டுபண்ணும் என நம்புகிறோம்.

# வாணியும் வஞ்சநாத

("மதி")

இருவரும் உடன் பிறந்தவர்கள் தான்! ஆனால் அவர்களிடையே இவ்வளவு வேற்றுமை இருப்பானேன்.........
"அமிர்தத்திற்கும் விஷத்திற்கும் உள்ள சம்பந்தம்போல்"......!

"குழந்தை மனம்" என்று சொல்லுவார்களே, அப்படி இருந்தது வாணியின் மனம்! பெண்மைக் குரிய யாவும் அவளிடம் பிரதி பலித்தன. அது மட்டுமல்ல, வில், வாள், முதலிய படைக் கலங்கள் யாவும் பயின்று, வீறுடன் விளங்கினாள். தன் தகப்பனுக்கு தக்க சமயத்தில், அரிய யோசனைகள் பல கூறி, அரசியலை நன் முறையில் அமைத்தவளும் அவளே...!

வாணியின் தம்பியான வாஞ்சி நாதன் இதற்கு முற்றிலும் மாறானவன். "குறிலது விகாரம் நெடில்" என்பர் இலக்கண நூலார். ஆனால் இந்த விதிக்கு மாறாக வாஞ்சிநாதன் வஞ்சிநாதனாகி விட்டான்! வீரத்தில் மாத்திரம் எவரையும் விஞ்சி விடுவான். வீரம் மட்டும் இருந்து என்ன பயன்......!

தந்தை தருமவீரன் வஞ்சியின் குணத்தை முளையிலேயே கிள்ளிவிட முயன்றான். ஆனால், அது கோடரி கொண்டு வெட்டும் நிலையாகி விட்டது. அதற்காக அரசன் எவ்வளவோ பாடு பட்டான். எல்லாம் பயனற்றுப் போயின, விழலுக்கு இறைத்த நீர் போல்......!

வஞ்சி இருக்குமிடத்தில் வாணி இருப்பது தவறு என்று கருதினான் தருமவீரன். இதன்படி வாணி அவளுடைய சிற்றப்பனிடம் அனுப்பப் பட்டாள்.

தருமவீரன் பாண்டிய நாட்டின் அரசன். கோல் கோணாக் கொற்றவன். ஆராய்ச்சி மணியின் நாக்கு அசையாமல் தன் நாட்டை ஆண்டு வந்தான் அவன்.

பல தீய துணைவர்கள் சேர்ந்து விட்டனர். வஞ்சியின் நெஞ்சம் மாறுபட்டது. தாயையும் தந்தையையும் அலட்சியம் செய்தான். அரசியலையும் அவமதித்தான். பன்றிகளுடன் கன்று சேர்ந்த கதையாகி விட்டது கடைசியில்.

மன்னன் மனம் வருந்தினான். மனைவியையும் மந்திரியையும் அருகு அழைத்தான். பின் வருமாறு கூறினான்.

"வஞ்சியின் தன்மை என் மனத்தைப் புண் படுத்திக் கொண்டிருக்கிறது. வழி வழியாய்ப் பெருமை வளர்த்த இந்தப் பாண்டிய நாட்டிற்கா......இத்தகைய இளவரசன்......? ஒரு பாவமும் அறியாத எனக்கா...இப்படிப்பட்ட...மகன்...? ஐயோ...! எனக்குப் பின் தாய் நாடான தமிழ் நாட்டின் கதி என்ன? அந்நியர் கையிற் சிக்கி எவ்வளவு அல்லற்படும்! என்னுடைய தாய் மொழியான தமிழ்...! பரம்பரையாய் பாண்டிய மன்னர்கள் பாடுபட்டுப் பண்

பாய் வளர்த்த பைந்தமிழ்...! ஒள்ளிய சங்கங்களால் உணவு ஊட்டப்பட்டு, இன்று உலகெலாம் ஒளிவீசும்...உயர் தமிழ்......! எத்துணை முறையில் சித்திரவதை செய்யப்படும்...? மொழிக்கு இழுக்கு நேரின்...நாடு...கலை...நாகரிகம்...ஆகிய இன்ன பிற வற்றிற்கு மன்றோ அழிவு ஏற்படும்......! இதனால் ஏற்படும் பழி மொழி...உலகம் உள்ளளவும் மாருதே...! இதை வஞ்சி கொஞ்சமும் நினைத்துப் பார்க்க வில்லையே...! இனி இவனை யார் திருத்துவது? யார் புத்தி புகட்டுவது.?..................!"

மனைவியும் மந்திரியும் என்ன சொல்லுவர்...மதி மயங்கினர். வீணில் வருந்துவதில் பயன் என்ன? எல்லாம் அவன் செயல்"...! இது தான் அவர்களின் தேறுதல் மொழி!

வஞ்சியின் பொறாமைக்கனல் சுடர் விட்டு எரிந்துகொண்டிருந்தது. "வாணிக்குத் தான் பட்டம்." இது அரசனின் முடிவான எண்ணம். இந்த வார்த்தையையும் இந்த சமயத்தில் அவனுக்குச் சொல்லி விட்டார்கள். "எரிகிற தீயில் எண்ணெய்...?" பாண்டிய சிங்காதனம் யாருக்குச் சொந்தம்? ஆகட்டும் பார்க்கிறேன்...! என்று துடிதுடித்துக் கொண்டிருந்தான வஞ்சி.

வஞ்சியின் சதியாலோசனை முடிந்தது. அதன்படி, அரசனும் அரசியும்—தாயும் தந்தையும், சிறையில் அடைக்கப்பட்டனர்... மனம் எவ்வாறு துணிந்ததோ......!

"வஞ்சி நாத பாண்டியன் வாழ்க!
வண்டமிழ் நாடு வாழ்க!"

இந்த வாழ்த்தொலியுடன் வஞ்சி பாண்டிய சிங்காதனம் ஏறினன்.

அரி இருந்த இடத்தில் நரியா.........?

"வஞ்சியின் வாயிலிருந்து வரும் ஒவ்வொரு எழுத்தும் சட்டம்."

இவ்விதம் மாறியது பாண்டிய அரசியல்.

பாண்டிய நாட்டிற்கு ஒரு சோதனை காலம். எங்கும் பசிக் கொடுமை......! தாயென விளங்கி வந்த தாமிரவருணி நதியும் ஒருதுளி நீர் கூட் கொடுக்க மறுத்துவிட்டது போலும்......! அந் நாட்டில் அத்துணை தண்ணீர்க் கஷ்டம். வஞ்சியின் மனம் இதை விட வரண்டு விட்டது.

"அரசனின் ஆட்சியில் நீதி இல்லை."

இப்படிப் பேசிக் கொண்டனர் மக்கள். மக்களின் வெறுப்பும் மன்னனை மருட்டிக் கொண்டிருந்தது.

மதுரையைப் பிடிக்கச் சமயம் பார்த்திருந்த சோனும் படைதிரட்டினன். வஞ்சியும் வாளா இருந்தான். தூசிகள் சூழ்ந்தன சிறிது நேரத்தில்......!

"வந்தது வரட்டும்......! மலை அசைந்தாலும் மன் மசையாத-இந்த வஞ்சியா...சோனுக்கு வணங்குபவன்......!"

இவ்விதம் கூறி வஞ்சி போருக்கு எழுந்தான். இரு படைகளும் கலந்தன......! வெற்றி தோல்வி அறியாத போர்......! இரத்த வெள்ளம்......!

ஊர் இரண்டு பட்டால்.........!

"பாண்டிய மக்களும் ஒரு பக்கம் குழப்புகிறார்களே......! வஞ்சி......! என் மகன் இந்தப் பாண்டிய ஆட்சியின் கடைசி அரசனு......!"

இங்ஙனம் வருந்தி சிறைக் கம்பிகளை எண்ணிக் கொண்டிருந்தான் தருமவீரன். இதைவிட அவனால் என்னதான் செய்ய முடியும்?

சேரன் சேனை சிதற அடிக்கப்பட்டது.

பாண்டியன் படையில் ஒரே மகிழ்ச்சி......

ஆனால்......! ஆனால்......!!

இந்த அற்ப சந்தோஷத்தையும் அனுபவிக்க வஞ்சிக்குக் கொடுத்து வைக்கவில்லையே......!

"குண்டனுக்கு இரண்டு ஆள்"

சொல்லி வைத்தாற்போல, சோழனுடைய படையும் சேரனுக்கு உதவி செய்ய வந்து விட்டதே...! மூன்று சேனைகளும் போர்க்களத்தில்......மூண்ட சினத்தோடு......போரிட்டுக் கொண்டிருக்கின்றன.

வெற்றியோ......? வெகுதூரத்தில்...இருக்கிறது...! சேர—சோழ—படைகள், பாண்டியன் படைகளை பஞ்சாய்ப் பறக்கடிக்கின்றன.

இந்த வார்த்தைக் "காட்டுத்தீ" போல் எங்கும் பரவி விட்டது.

III

பாண்டியன் படையில் பரபரப்பு.........! அவன் வீரர்கள் புறமுதுகிட்டு ஓடுகின்றனர், தோல்வியால்..............!

"ஓடாதீர்கள்.........! எதிர்த்து நில்லுங்கள்...!" இந்த குரல் கேட்டு வீரர் நிற்கின்றனர். ஏன் நிற்கிறீர்கள்?... இதுவோ நமது வீரம்...! "பாண்டிய நாட்டை அந்நியர் பங்கிடுவதோ......! பல மொழிகளுக்கும் தாயான நமது பைந்தமிழ் பாழடைவதோ...?"

என்று எதிரில் குதிரைமேல் வந்துகொண்டிருந்த வீரன், அவர்களுக்கு உற்சாகமூட்டி படைகளைத் திருப்பிக் கொண்டு தானும் புகுகின்றான், போர்க்களத்தில்...!

சடார்...சடார்...வாட்கள் மோதுகின்றன.

பளீர்...பளீர்...கத்திகள் மின்னுகின்றன.

"அ...ஆ......!" போர்வீரர்கள் கீழ் விழுகின்றனர்......!

"அம்மா......! ஐயோ.........!!" போர்க்களம் அல்லோல கல்லோலப் படுகின்றது. குதிரைவீரன் எதிரிகளின் சேனையைக் கலக்குகிருன். மார்பிலே பல காயங்கள்......! எதிரிகள்...... சிதைந்து...ஓடுகின்றனர். சேரனும்—சோழனும்—கொல்லப்படுகின்றனர். வெற்றி...!!

"பாம்...ம்...! பாம்...ம்...ம்!!"

என்று வெற்றிச் சங்கம் ஊதுகின்ருன், வீரன் குதிரைமீது நின்று கொண்டு. மற்ருெரு கையில் மீனக்கொடி பறக்கிறது.

"வீரன்" வாழ்க! என்ற வாழ்த்தொலி வானைப் பிளக்கிறது.

"ஜிவ்"........என்ற சரத்தின் சப்தம்...எதிரியின்...அம்பு தான்...சந்தேகம் இல்லை......!

"ஆ...அம்மா...!" அவ்வளவு தான்...! அம்பைப் பிடித்த கையுடன் குதிரையின் மீதிருந்து கீழ் விழுகின்ருன்...வீரன்...!

"என்ன திமிர்...! இதுவும் ஒரு வீரமா...!"

வீரர்கள் கூடுகின்றனர்.

வஞ்சியும் வருந்தி வருகின்ருன்.

"என்ன...! நிற்கிறீர்கள் சிக்கிரம்......மருந்து......பாண்டி வேந்தே..." என்ருன் வீரன்.

"அதைப் பற்றி அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்...!"என்று கூறினன் மறுபடியும் வீரன். அவன் மனம் எதையோ நாடுவதைப் போல் முகம் மாறுபடுகிறது.

இதைக் குறிப்பால் அறிந்து கொண்டான் வஞ்சி.

"சகோதரா...:நீ யார்? உன் அரச பக்திக்கு நான் மெச்சுகின்றேன். உன் வீரத்திற்கு வணக்கம் செலுத்துகிறேன். உன் பெயரை பாண்டியநாடு இந்தப் பார் உள்ளளவும் மறக்காது. உன் எண்ணத்தைக் கூறு," என்று முகமன் கூறினன், வஞ்சி.

"இந்தப் பாண்டிய நாட்டின்—ஏன்?—அரசனின் ஆணையாளர்களிலே ஒருவன் நான். என் கடமையைத் தான் செய்தேன். ஆனல்...பாண்டிய மன்ன...! கடைசியாகத் தங்களிடம். ஒரு வரம்...! அதைத் தாங்கள் எனக்காக நிறைவேற்ற வேண்டும்...!"

"ஒருவரம் அல்ல...! பல வரங்கள்...! அதைச் சொல்...! நிச்சயமாய் நிறைவேற்றுகின்றேன்."

"ஆணையிட்டுச் சொல்லுங்கள்...!" என்ருன் வீரன்.

"என் வார்த்தையில் நம்பிக்கை இல்லையா......! சத்தியமாய்ச் சொல்லுகிறேன்...! உன் ஆசையை நிச்சயமாய்ப் பூர்த்தி செய்கின்றேன். ஆபத்தில் உதவிய அன்பனுக்கு இதைக் கூட என்னல் செய்ய முடியாதா!......விஷயத்தை வெளியிடு......!" என்று அன்போடு கேட்டான் வஞ்சி.

"என் உயிர் போவதற்குள்...கடைசியாக...என் பெற்ருேரைக் கண்டு பேச விரும்புகிறேன். இது தான் என் எண்ணம்."

"பெற்ருேர்களா...! அவர்கள் எங்கே இருக்கிருர்கள்...?"

"அவர்கள்...! சிறையில் இருக்கிருர்கள்...! தங்களால்..."

வஞ்சியின் மனம் கலங்க ஆரம்பித்தது.

"என்ன! என் பெற்றோரை யல்லவர்......நான் சிறை வைத்திருக்கின்றேன்...வேறு ஒருவரையும்...அப்படி..."

"ஆம்...! அவர்கள்தான் என் பெற்றோர்" என்று கூறினான் வீரன். அவன் கண்களிலிருந்து முத்துகள் சரஞ்சரமாய் உதிர்ந்தன. "அப்படியானால்...! நீ என் சகோதரி...வாணியா...!" என்றான் வஞ்சி பதைபதைத்து...! உடல் கிடுகிடு என ஆட் ஆரம்பித்தது தான் ஆடாவிடினும் தன் சதையாடு மல்லவா! "ஆம்...!" என்று தலையசைத்தான் அந்த வெற்றி—...!

"ஆ...வாணீ—"என்று கூறிக்கொண்டே... மூர்ச்சித்தான் வஞ்சி...

சில விநாடிக் கெல்லாம்...தன் உணர்வு வரப் பெற்றான்... வஞ்சி.

"வாணீ...! சகோதரி......!! என்னை மன்னித்து விடு......! உன்னுடைய...ஆணுடை...! ஒப்பற்ற வீரம்...பெற்றோரிடங் கொண்ட பேரன்பு—நாட்டன்பு...இவைகள் என்னைப் புனிதனாக்கி விட்டன...! சற்று பொறு...அக்கா...! இதோ..." எனக் கூறிக் கொண்டே வஞ்சி எழுந்து ஓடினான் சிறைக்கு...

ஆ...அந்தோ...! அவன் அங்கே...சிறையிலே... மறுபடியும்...கீழ்வீழ்ந்து விட்டானே...! அவன் அங்கு கண்டதென்ன...? இரண்டு உயிரற்ற உடலங்கள்...

"சேர—சோழ—படைகள் பாண்டியனை...வளைத்துக் கொண்டன." இதைக் கேட்டதும்—அவமானத்தால்—புத்திர சோகத்தால்...பெற்றோர் அப்பொழுதே தங்கள் உயிரை மாய்த்துக் கொண்டதை வஞ்சி எப்படி அறிவான்...?

உடைந்த உள்ளத்தோடும்...மூர்ச்சித்து எழுந்த வஞ்சி இரண்டு உடல்களையும் தூக்கிக் கொண்டு யுத்தகளத்திற்கு ஓடினான்...! "பித்தம் பிடித்தவன் போல்."

பெற்றோரின் பேச்சைக் கேட்கா விட்டாலும் அவர்களின் முகத்தையாவது வாணி கடைசி முறையாகப் பார்க்கட்டும்... என்று பெற்றோரைத் தூக்கி வந்தான் போலும்......!

"வாணீ...! வாணீ...!"என்று கூவிக்கொண்டேவந்தான் வஞ்சி. பெற்றோரை ஒரு புறம் இறக்கி விட்டு வாணியைத் தொட்டான்.

ஐயோ...! அவளும் தன்னுடைய கடைசி மூச்சை விட்டு விட்டாள்...! வஞ்சியின் தலை சுழன்றது. இருதயம் வெடித்து விடும்போலிருந்தது.

"அந்தோ..! தெய்வம் எனக்குத் தக்க தண்டனையே விதித்தது..." மன்னிக்க முடியாத குற்றத்திற்கு—இடு செய்ய முடியாத நஷ்டம்"...

இதுதான்...வஞ்சி கூறிய கடைசி வார்த்தை...வாணியின் உடலின்மேல் வஞ்சி விழுந்தான். அப்புறம் அவன் எழுந்திருக்கவே இல்லை.

"ஒரு உயிர்—மற்ற மூன்று உயிர்களையும் யுத்தகளத்தில் தேடி அலைந்தது."

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

## (சி. பி. ஆனந்தம்.)



### ப்ளூட்டோ—(Pluto)

இந்த இருபதாம் நூற்றாண்டில்—அதாவது இற்றைக்கு பதினான்கு ஆண்டுகட்கு முன் கண்டுபிடிக்கப்பட்டதொரு நூதனக் கிரகம் இதுவாகும் "இதைக் கண்டவர் டாக்டர் லவல் (Dr. Lowell) என்னும் மேலை நாட்டுப் புலவராவார். இவர் வான ஆராய்ச்சிக் கூடத்தில் உள்ளவர். அங்காரகன்—செவ்வாய் உலகைப் பற்றிய இவருடைய ஆராய்ச்சிகளும்—கண்டு பிடிக்கப்பட்ட உண்மைகளும் பதிவுக் குரியனவாக மதிக்கப் படுகிறது.

சூர்யனுடைய ஈர்க்கும் சக்தி, சூர்யனுக்கும்—பூமிக்கு முள்ள தூரம் எவ்வளவோ அவ்வளவு முன்னூறு பங்கு தூரம் வரை வான வெளியில் பரவி இருக்கிறது. சூர்யனது ஈர்க்கும் சக்தி பரவி யிருக்கும் எல்லை வரையும் இடம் பெறும் கோள்கள் அதன் ஆதிக்கத்திற் குட்பட்டதாக விருக்கின்றன. அத்தகையன பலவற்றையும் பூமியி லிருந்து காணலாமென்பது வான நூற் புலவர்களுடைய சித்தாந்த மாகும். இவ் வியல்பில் இடைவிடாத முயற்சி செய்து வருகிறார்கள். அம் முயற்சி நாளாவட்டத்தில் நூதனக் கோள்களைக் காணுவதில் வெற்றி யடைவதிற் குறைவில்லை. இதுவரை சூர்யனுக்கும்—பூமிக்குமுள்ள தூரம் அத்தனை முப்பது மடங்கு தூரத்தி லுள்ளன மட்டும் — அதாவது நெப்டியூன் (Neptune) — வருணன் என்னும் கோள் வரையும் கூறினோம். அதற்கப்பால் சூர்யனுக்கும்—நமக்கு முள்ள தூரம் அவ்வளவு நாற்பது மடங்கு தூரத்தில் கண்டதுதான் 'ப்ளூட்டோ' (Pluto) என்னும் இந்த நூதனக் கோள் ஆகும். இதனை மேலே கூறிய டாக்டர் லவல் என்பவர் 1930ம் ஆண்டு ஜனவரிமீ 31உ யன்று கண்டார்.

இது முன் இறுதியாகக் கண்ட வருணனை அதன் சுற்று வீதியில் அதன் கதியைப் பாதிக்கும்படி ஏதோ ஒன்று வலித்து இழுப்பதாகத் தோன்றிற்று. மேலும், அவ் வருணனுக்கு அப்பால், அதன் ஆதிக்கத்திற்கு உட்படாத தூமகேதுக்கள் சிலவற்றின் ஸஞ்சாரமும் காட்சிக் குரியதாக விருந்தது. அத்தகைய தூம கேதுக்கள் வேறொரு நூதனக் கோள் ஒன்றின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருத்தல் வேண்டும். அது தூமகேதுக்களின் இயல்பு. இவ்விதமான காரணங்களால், வான நூலார் வருணனுக்கு அப்பாலும் ஒரு கோள் இருக்கவேண்டுமென்று அனுமானித்திருந்தார்கள். அவ் அனுமானம் இந்த நூற்றாண்

டில் டர்க்டர் லவல் என்னும் செவ்வாய் உலக ஆராய்ச்சி வல்லுந ரால் நிதர்ஸன மாக்கப்பட்டது.

இந்த நூதனக் கோளுக்கு மேலைப்புலவர் 'ப்ளூட்டோ' (Pluto) என்று பெயர் வழங்கினர். நம்முடைய நாட்டில் 'குபேரன்', 'பலன்' என்று வழங்கப்படுகிறது. இந்தியாவிலுள்ள இலக்கியங்களில் 'குபேரன்' என்னும் சொல் பொக்கிஷத் தலைவனைக் குறிக்கிறது. இலிங்க புராணமும் அதே கருத்தில் 'இயக்கர் கோ' வென குபேர னுக்கு சிறப்புத் தருகிறது.

இதன் பரிமாணம் முதலியவற்றைப்பற்றி இன்னும் கணக் கிடப் படவில்லை. ஆயினும், இது நாம் வசிக்கும் பூமி முதலிய சிறு கோள்களின் இனத்தில் சேர்க்கக்கூடிய பரிமாணங்கொண்ட தெனத் தெரிகிறது. இக் கோளின் சுற்றுவீதி வருணனுடைய சுற்று வீதிக்கு அப்பால் இடம் பெற்றுள்ளது. இது சூர்யனை ஒரு தட்வை சுற்றி முடிப்பதற்கு இருநூற்று நாற்பத்து ஐந்து ஆண்டுகள் ஆகுமென்று கணக்கிட்டிருக்கின்றனர் அறிஞர்கள்.

இது கண்டுபிடிக்கப்பட்ட பொழுதில், தக்ஷிண அக்ஷாம்சம் (Southern Latitude) பாகை *0* கலை *14*-ல் கிழக்கு ரேகாம்சம் (Eastern Longitude) பாகை *108* கலை *16*-க்கு நேராக இடம் பெற்றிருந்தது. அப்பொழுதைய அயனாம்சம் பாகை *22* கலை *44* விகலை *51*. இதைக் கழிக்க கிராயன ஸ்புடமான பாகை *85* கலை *31* விகலை *09* என்னு மிடத்தில்—அதாவது மிதுன ராசியில்—குரு கிரகத்தின் ஸ்வசாரமான புனர்பூசம் என்னும் நட்சத்திரத் தில் அது ஊர்ந்து கொண்டிருந்தது. இப்பொழுது பாகை *105* க்லை *15*ல்—அதாவது கடக ராசியில் சனிக் கிரகத்தின் ஸ்வசாரமான பூசம் என்னும் நட்சத்திரத்தில் ஊர்ந்து கொண் டிருக்கிறது. எனவே, பதினன்கு ஆண்டுகளில் பாகை *19* கலை *43* விகலை *51* தான் அது முன்னேறியிருக்கிறது. இந்தக் கணக் கில் அக்கோள் சென்றுகொண் டிருக்குமானல். சூர்யனை ஒரு தட்வை அது சுற்றி முடிக்க ஏறக் குறைய இரண்டரை நூற் றுண்டுகள் அதற்கு வேண்டிய திருக்கும். அதற்கு தன்னைத் தான் சுற்றிக்கொள்ளும் ஒரு கதி உண்டாவென்பது இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை. எனினும், ப்ளூட்டோ கிரகத்தின ஓர் ஆண்டுக்குள் பூமியின் ஆண்டுகள் இருநூற்று ஐம்பது கடந்து விடும்.

இந்தக் கிரகத்தின் பலன் மிகவும் முக்கியமானதென்று கருதுகிறார்கள். சரித்திர ஆதாரங்களில் நூற்றுண்டுக் கணக்கி லுள்ள ஸம்பவங்களால் அவ் வப்பொழுது ப்ளூட்டோவின் ஸஞ்சாரம் இடம் பெற்ற எல்லைகளுக்குப் பலன்களை நிர்ணயிக் கின்றனர்.

---

# பெண்ணீர்மை

[நா. கோதண்டபாணி]



**ப**ண்டைத் தமிழ்ப் புலவர்கள் பெண்மையறம் பிழைத்த பேதையர்களைப் பழித்தலோ டமையாது, ஆண்மை யறந் தாழ்த்த அதமர்களையும் வெறுத்துப் பழிப்பதே கொள்கையாக் கொண்டவர்க ளென்பது.

*பெரிய வாள்தடங்கண் செவ்வாய் பிறர்மனை நயக்கு மாந்தர்*
*மரிய வாய்ப் புறஞ்சொற் கூர்முள் மத்திகைப் புடைப்புமன்றி*
*ஒருவர் வாயுமிழப் பட்ட தம்பல மொருவர் வாய்க்கொண்டு*
*அரியன செய்ய வையத்(து) ஆண் பிறந்தார்க ளன்றே.*

சிந்தாமணி—(2821)

*காணிற் குடிப்பழியாம் கையுறிற் கால் குறையும்*
*மாணின்மை செய்யுங்கால் அச்சமாம்—நீணிறையத்*
*துன்பம் பயக்குமால் துச்சாரி ! நீகண்ட*
*இன்பம் எனக்கு எனைத்தாற் கூறு.* (நாலடி—64)

என்று மிவை போன்ற செய்யுட்களால் எளிதிற் போதரும். இஃதொப்ப, பெண்ணீர்மை குன்றாப் பெருமகளிரையும் ஆண்மையறம் பிழையா ஆடவர்களையும், ஊரும் நாடும் உவத்தலோடு புலமையறமும் போற்றுதலொருதலை.

பெண்மை யறத்தைப் பிழையாது ஓம்பும் பெருமகளிரைப் போற்றும் அறம் மேற்கொண்ட வில்லியாரும், வட வாரியரின் வரலாற்றினைத் தமிழிற் கூறுங்காலத்து, பாஞ்சாலியைச் சுட்டுந்தொறும் "வடமீனனையாள்" "தெய்வமன்னாள்," "அருந்ததிக்கு மெய்தாத கற்புடையாள்," "தீண்டாத கற்புடைய செழுந்திரு", "பெண்ணீர்மை குன்றாப் பெருந்திரு," "கற்பு நயந்தணிந்த பூணையனையாள்" என்பன போன்ற தொடர்களால் அவளைக் கற்பறங் காத்த பொற்புடையளாகச் சுட்டிப் புலமை யறங் காத்துப் போந்தார்.

இவ்வாறு யாண்டும் பாஞ்சாலியின் கற்புக்கு மாசணுகாது காத்து வந்த செஞ்சொற் புலவர் "ஐம்புலன்களும்" எனத் தொடங்குஞ் செய்யுளால் "அவள் கன்னனை யுள்ளுறக் காதலித்தாள்" எனக் கூறிப் புலமை யறம் பிழைப்பாரா?

அவ்வாறு கன்னனைக் காதலித்தமை குறிக்கும் வேறெவ்விதச் செவ்வியும் 'பாரதத்'தில் வில்லியாரால் கூறப்படவில்லை. பாரதம் முழுமையும் பாஞ்சாலியின் நற் பண்பை விளக்குவதாகவே யுள்ளது.

பாரத வரலாற்றினைச் சுருக்கி யறிவிக்கப் புக்க, பாரதியாரும், "பாஞ்சாலி சபதம்" எனத் தலைப்பிட்டு வரைந்தமை இங்கு உன்னியுவத்தற் குரியது. நிற்க.

இம்மங்கை நல்லாள் முற்பிறப்பில் ஆதவனையும் சில நாழிகை உதியாது தடுத்ததாகக் கூறப்படுஞ் செயலும், "மென் பாவை பங்கனை"க் கண்டகன் பெற்றதாகச் சுட்டும் பெரு நீர்மையும், "மூளார் அழலுற்பவித்த" தாகக் கூறுந் தன்மையும், இவளைத் தெய்வீக நங்கை யாக்கியது ஈண்டு அறிதற்குரியது.

"ஆதியிற் குந்தி மைந்த ரைவர்க்கு முரியளா மென்றோதிய விதி"யினாலும், பிறர் தனக்காக்கிய பெருங் கட்டுகளாலும் ஐவரை யும் வேட்டனளே யன்றி மனமறிய மணந்தனளல்லள். இவ்வாறு 'நெஞ்சினிற் பிழையிலாதவளான' பாஞ்சாலி ஐவரையும் மணந்த ஞான்று, "ஈன்ற காதல் வெவ்வா ரழலில் முறையே மூழ்கி மீண்டு தோன்றி" மணந்தமை யவள்தன் 'பெண்ணீர்மை குன்றாப்' பெருநிலையைக் காட்டுவதாக வுள்ளது.

மற்று, அவள் வரலாறும் 'கற்புக் கணிகலனாக' அவளைக் காட்டுவது மகிழ்தற்குரியது.

வினைப் பயனால் தருமன், சூதாடித் தன் பொருள்களையும், உரிய தம்பியரையும். தாரத்தையும் ஒருங்கு தோற்றனன். பின்னர், துர்க்குண நேயனான துரியன், பாஞ்சாலியை யர சவைக்குக் கொணரும்படி கூறினனாக, துச்சாதனன் சென்று "அவள் பைங் குழல் பற்றித்" தீண்டானாகிச் செயரசவைக்கு ஈர்த்துச் செல் கின்றான். ஆங்கு அவள், முன்னர் "பேரவையைத் தொழுது அழுது சோர்வுற்று" "எல்லா நெறியு முணர்ந்தார்க் கிதுவோ இயல்பு" என முறையிட்டாள். பின்பு "மன்றோற்றனன் வெஞ் சூதாகில் வழக்காற் கொண்மின்" "மன் தன்னைத் தோற்ற பின் என்னைத் தோற்றனன். எனவே, முன் தோற்ற பொருள் முன்னும், பின் தோற்ற பொருள் பின்னும் கவரப்படுவதன்றோ முறை" என்னும் நியாயத்தைக் கூறுகின்றாள். தன் கற்பைக் காத்தற் பொருட்டு,

"தற்காத்து, தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்தல்" தானே பெண்மைக் கழகு.

முறையறியா "ஊமர் கணம்" மோனம் சாதித்தது.

"பொல்லா நெறியி லனைவோரும் போகா வண்ணம்" விகருணன் கூறிய அறவுரை "புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளா"யிற்று.

அவ்விகருணனை, "வாய்மைக் கடவுள்" என்றதோடமையாது அவ்வவையோர் கூற்றாகத் "தக்கோன்" எனவோர் பேர் சூடி மகிழும் வில்லியாரின் புலமை நலம் போற்றுதற் குரியதன்றோ! இனித், துரியன் "இவ்வழக்கு வார்த்தை சொன்ன கிளிமொழி யைத் துகிலுரிதி" என உருமினான். இவனின் இக்கூற்று ஆண்மை யறம் பிழைத்தலையும் நிலையினையும், அரசிலக்கணமறியா ஒழுக்லாற்றினையும் சுட்டுவதாக இல்லையா?

"தருக் துகிலெனத்" துச்சாதனன் பற்றி யீர்க்க, வேறொன்று மாற்றுதற் கியலாத பாஞ்சாலி "வேறோர் சொல்லும் கூறுமற்

கோவிந்தா வென் றரற்றிக் குளிர்ந்த நாவி லூருதவமிழ் தூறி உடல் புளகித் துள்ளமெலா முருகி" நின்ருள்.

"அன்பா னினைவார்து உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேரும்" பரமனு 'முடுத்தநிறம் பற்பலகொண்ட ஆயிரங் கோடி யாடை'களை யருள, "உரிந்தானு மிருகை யிளைத்து" நின்ருன்.

இஃதோ டமையாத "தந்தை விழியருள் போலத் தகு மனத் தன், "பைந்தொடியைக் கொணர்ந் தினியென் மடியின் மிசை யிருத்துகெனத்" துச்சாதனனுக்குப் பணிக்க "மாயனை மறவா"த் தூய சிந்தையள் வெகுண்டு, "எவரும் வெருவுற" "இப்புன் ருெழி லோன், யானிருக்கக் காட்டிய தன் ருெடை வழியே புள்வாய் குத்த வாருயிர் சென்றிடுக" எனச் சபித்து,

"அரசவை யேற்று அளகந் தீண்டி, அணிதுகில் தீண்டி அடாது சொற்ற துரியனை யவன் றம்பியரோடு மயரிற் குருதி பொழிய முடி துணித்து வெற்றி முரசு முழங்கும்போ தல்லது விரித்த குழல் முடியேன்" என வஞ்சினங் கூறிக் குழல் விரித்த பாஞ்சாலியின் கற்பு மேம்பாட்டை

"வீரர் கற்பு", "மறக் கற்பு" என்ற சொற்களாலன்றி வேறு எச் சொற்களால் விரித்தற்கு இயலும்.

பின்னர், "அரிவை யோடகன்று நீவி ரைவிரு மட்வி யெய் தி"ப் பன்னீராண்டு கழித்துப், பின்ருேராண்டு, கரந்துரைந்து மீளின் நாடு பெறுதற் குரியீர்" எனப் "பிதாமகன் முதலா யுள் ளோர்" கூறிய அப்போழ்தும், பாஞ்சாலி வணங்கி, "ஐவரரசரும், எனது மைந்தரும் யானும் உரிமையின் றெய்த வெஞ்சூதாடுத லுறுதி" என்றனள்.

இவ்வுரையி னுண்மையை யாய்வார்க்கு,

"பாஞ்சாலி தனக்கு மட்டு விடுதலை பெற்றுக்கொள்ள அவையேறி வழக்குரைவ ளல்லள்" என்பது பெறப்படும். இது காறு மறிந்த பாஞ்சாலி வரலாற்ருல், அவள் "தற்காத்த" திறனும், "தற்கொண்டாற் பேணிய" முறையும், "சூதாடுத லுறுதி" என மொழிந்து அனைவோரையும் மீட்பதற் குபாயந் தேடிய பெருவீறும் புலனும்.

"உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்" என்ற தெள்ளுரையினையே, இலக்கணமாக் கொண்டு வில்லியார் "கங்கை மகன் முதலான காவலரை" வணங்க வைத்தும், கண்ணனைப் புகழ வைத்தும், பாஞ்சாலியின் பண்பைச் சுட்டியது சுட்டி மகிழ்தற் குரியது. நிற்க.

பாஞ்சாலி, "ஓதிய விதியினுலும்," வியாதன் போன்றவரின் வற்புறுத்தலினுலும், மறுக்கொணுது அபலையாகி ஐவரையும் மணந்தன ளெனினும், தன்னெஞ்சறிய மனக்கோயிலில் அவர் களுக்கு இடந்தரவில்லைபோலும்.

முற் பிறப்பில் கொழுநனை இறைவனாக வழிபட்டமையின் பயன், இப் பிறப்பில் அவ்விறைவனே தனக்குரிய கோயிலாக அவள் மனத்தை யாக்கிக்கொண்டனனோ!

துச்சாதனன், துயிலுரியுங் காலத்து "வேறோர் சொல்லுங் கூறாது கோவிந்தா என் றரற்றிக் குளிர்ந்தநாவி லூறுத வமிழ் தூறி யுடல் புளகித் துள்ளமெலா முருகி"னமையும், வெகுண்டு வஞ்சினங்கூறிய காலத்தும் "மாயவனை மறவாளாகி" இருந்தமை யும், கண்ணன் தூதேகுங் காலத்து "என் மானம் (உனையன்றி) ஆர் வேறு காத்தாரே" எனக் கூறினமையும், மாற்றமாகக் கண்ணன், "எத்தரிய பெருங் கற்பி னிளையாளுக்கு" "நல்லாய்! உன் பைங்கூந்தல் நானே முடிக்கின்றேன்" என்றமையும் ஆய இவைபோன்ற செயல்களை நோக்குவார்க்கு அவள் பேரிதயத்திற் குடிகொண்டவன் 'இறைவனே' எனு முண்மை வெளிப்படும்.

நிற்க, துரோபதை 'உள்ளுற நினைந்து உருகுவதாக வில்லி யார் சுட்டும் இடம் ஒன்று அரசவையிற் கண்ணனை நினைந்து கனிதல் இதனைக் கவி தன் கூற்றாக கூறி யுள்ளார். இனி மற் றொன்று பழச் சம்பவத்தில். இது பாஞ்சாலி கூற்றாக உள்ளது.

இனி, துரோபதை, "தாமொருவளே யன்றித் தன் கொண் கரும் கண்ணனைப் பெருந் துணைவனாகக் கொண்டவர்கள்" என்னு முண்மையையு மறிந்தவளே! இது,

"வன்பாரதப் போரில் வந்திருந்தே மைவரையும்
நின் பார்வையாற் காக்கவேண்டும் நெடுமாலே"

என்னும், சகதேவன் கூற்றிலும், ஐவரும் கண்ணனை விளிக்கும் சுட்டுகளாலும் நாமறியக் கிடக்கிறது.

பாஞ்சாலி இறைவனை யன்றி வேறெவரையும் நினைந்து உருகா உள்ள முடையவள் என்பதும், பாண்டவர்களும் கண்ண னைத் தம் பெருந் தலைவனாகக் கொண்டு அவன் வழி யொழுகி வந்தவர்க ளென்பதும் நினைவி லிருத்தற் குரியது.

இனி, இதுகாறுங் கூறியவை கொண்டு "ஐம்புலன்க"ளும் எனத் தொடங்கும் செய்யுட் பொருளின் உண்மை காண முயலு வோம்.

## [கொண்டு கூட்டு]

1. அம்புவிதனில் பெண்(ஆக) பிறந்தவர் எவர்க்கும், ஆட் வர் (காத்தற் குரியராக) இல்லாமையின்;

2. ஐம்புலன்களும் போல் ஐவரும் பதிகள் அல்லால் (அவர் களே என் களைகணோர் என யான) நம்புதற் குளதோ?

3. ஆகவும், இன்னும் வேறொருவன் இறைவனே எம்பெருங் கொழுநன் ஆவதற்கு எனது பேரிதயம் உருகும்.

1. இவ் வழகிய பூமியில் பெண்ணாகப் பிறந்த எல்லார்க்கும் (அவர்களின்) ஆடவர்களே (உற்றுழி உதவும் களைகணோராக) இல்லாமையின். (தன்னிலையினை நினைவு கூர்ந்து போலும்)

[பிரபந்த பரித்ராணம் என்னும் நூலுக்கு உரை தெளித்துப் போந்த திருவாளர். பண்டித. அ. அரங்க ராமாநுசம் பிள்ளை அவர்களும் "பர்த்தாவும் ரக்ஷகனாக மாட்டான். இத்தை துரோபதி பக்கலிலும்................காண்க" என்ற அந் நூற்றொடரின் பொருளில் "பாஞ்சாலியை அரசவையிற் பாண்டவர்கள் காத்தற் கியலாமையும், பரமனே காத்த பண்பையும், ஒரு மகளுக்கு கணவனொருவனே களைகணாக இருத்தற் கியலாமையையும் விரித்தமை சண்டைக் கியைபுடைத்து.]

2 (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும்) ஐம்புலன்களும் போல் (பாண்டவர்கள்) ஐவரும் (எனக்கு)த் தலைவர்களாக உள்ளாரே யன்றி, (அவர்களே என்னை எவ்வமயத்தும் காத்து வழி நடத்தும் களைகணோர் என யான்) நம்புதற் குளதோ!

[பின்னரும், பாஞ்சாலி.

" கண்ணிலான் காதல் மைந்தன்
பற்றித் துகிலுரியப் பாண்டவரும் பார்த்திருந்தார்"

என இவ் வுரையினையே கூறுத லுணர்க.]

3. ஆகலின், (ஐம்புல னிகாத்த பாண்டவரினும் இன்னம் வேறொருவனான இறைவனே எங்க ளனைவர்க்கும் உரிய (இடுக்கண் நிகழுந் தொறும் நீக்கிப் புரக்கும்) பெருந் தலைவனாக (என்றும்) இருத்தற்கு எனது பேரிதயம் உருகுகின்றது.

**இன்னம் வேறொருவன்** என்ற தொடர் பாண்டவரினும் வேறான ஒப்புவமையற்ற கண்ணனைச் சுட்டிற்று.

**எம்பெரு கொழுநன்:** பாஞ்சாலி "யாங்கள் உரிமை யின்றெய்த வெஞ்சூதடுத லூறுதி" என வன்று கூறி அனைவோரையும் மீட்க முயன்றவ ளாகலின், இங்கும் 'எம்' எனும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மையால் பாண்டவரையும் உட்படுத்தி "எங்க ளனைவரையும் நின் பார்வையாற் காக்க வேண்டும" என முறையிடுபவளாக "எங்களது பெருங் * கொழுநன் இறைவனே 'நீயே) ஆவதற்கு எனது பேரிதயம் உருகுகிறது என்றனள்.

**பேரிதயம்:**—மாயவனை மறவாத் தூய சிந்தையைப் 'பேரிதயம்' என்பதே ஏற்புடைத்து.

எனவே, இதுகாறுங் கூறியவற்றான், பாஞ்சாலி பெண்ணீர்மை குன்றாப் பெருமக ளென்பதூஉம், அவள் தன் கற்புக்கு மாசு கற்பிக்கும் நோக்கம் வில்லியாரால் யாண்டும் சுட்டப்படவில்லை என்பதும் ஆகிய இவைபோன்ற இன்னும் சில உண்மைகளும் நாமறியக் கிடக்கின்றது. எனினும்,

" காய்தல் உவத்தல் அகற்றி ஆய்தல்
அறிவுடை யார்க் கண்ணதே."

---

* கொழுநன்: எப்பொருட்கு மிறையோன். (இப்பொருள் சூளாமணி நிகண்டு. 2-வது தொகுதி 10-ம் செய்யுளால் உய்த் துணர்க.)

# விஞ்ஞானப் புனல்

(டி. பி. நவநீத கிருஷ்ணன், M. A.)



"கல் காயுங் கடு வேனிலொ
டிரு வானம் பெய லொளிப்பினும்
வரும் வைகன் மீன் பிறழினும்
வெள்ள மாறாது விளையுள் பெருக......



நீல நதியும், யூப்ரடிஸ் நதியும், சிந்து நதியும் என்றும் நீர்வறாது பெருக்கிட்டோடும் ஆறுகள். அந்நதிகளின் நீர் பரத்தலால், அவற்றைச் சூழ்ந்திருந்த படுகை நாடுகள், விளைவு குன்றாத வயல்களுடன் வளமுற்றிருந்தன. உழவுத் தொழின் முறைகள் சிறந்த பின், அவ் வள நாடுகளின் பெருமை மேலும் ஓங்கலாயிற்று. அவற்றின் அருந்தன்மை மக்கள் உள்ளத்தைக் கவர்ந்தது. நீர்வளமும் நிலவளமும் மிக்க அந்நாடுகளில், வேளாண்மை யளித்த விளைச்சல், வேறு சம வெளிகளில் கிடைத்த விளைவைவிடப் பன்மடங்கு மிகுந்திருந்தது. அவற்றில் விளைந்த தானிய மிகுதி, பண்டமாற்று முறைகளில் செலவழிக்கப் பட்டதின் நிமித்தம் பல தொழில்கள் சிறக்கலாயின. நிலத்தின் வளம் குன்றாதிருந்தமையின், அந்நாடுகளில் ஊன்றிய ஊர்களும் நிலையாய் ஆயின. ஊர்கள் நிலையானதால், அவற்றின் மக்களும் நிலையான வாழ்க்கையை நடத்தலாயினர். நிலையான வாழ்க்கையைப் பெற்றதால், வினையாற்றும் வகைகளில் தேர்ச்சியுறத் தருணம் வாய்த்தது. ஒவ்வொரு வகையான வினைஞரும் தத்தமக்கான வினைகளில் கருத்தூன்றிக் கவனஞ் செலுத்தவும், அப்பணிகளையே மேலும் மேலும் திருந்திய வகைகளில் செய்யவும் இயன்றதால், தொழிற் பயிற்சியில் தேர்ந்தவராயினர். உலோகங்களை, அவற்றைக் கொண்டுள்ள கற்களினின்று காய்த்தகற்றியெடுக்கவும், அவற்றின் பாற்பட்ட தொழில்களைச் செய்யவும்—அத்தொழிலின் பாற்பட்ட அறிவில் தேர்ச்சியும் அதன் வினை செய்வகைகளில் பயிற்சித் திறனும் வேண்டும். அத்தொழிலை, அவ்வாறான தேர்ச்சியும் பயிற்சித்திறனும் பெறாதவன் செய்ய இயலாது. அத்தொழிலைச் செய்ய, அதன் கலையின்பாற் பட்டதான தெளிந்த அறிவும், வினை செய் திறனும் இன்றி யமையாதது. அவ்வறிவும் திறனும் கருத்தூன்றிய நற்பயிற்சியினாலேயே பெறப்படும். இவ்வாறு, ஒரு கலை மட்டுமே, தனித்த முறையில், தேர்ந்த வகையில் பயிற்சி செய்யப் படுதலானது, 'சிறப்பியல் பயிற்சி முறை' (ஸ்பெஷலிஸேஷன்) எனப்படுகின்றது. சிறப்பியல் பயிற்சியால், சிறப்பியலான தேர்ச்சி யேற்படும். 'உணவுப் பொருள்களின் மிகுதி, பலவகைக் கலைகளிலும் சிறப்பியல் பயிற்சியால் விளையும் சிறப்புத்திறன் வளர்ச்சி யடைவதற்கு

ஏதுவாயிற்று. ஏனெனின், உணவுப் பொருள்களின் மிகுதியைக் கொண்டு, சிறப்பியல் பயிற்சி செய்யும் கலைஞருக்கு உணவளிக்கலாம்; அதனால், அவர்கள் தாமே உழைத்துப் பயிரிட்டு உணவைப் பெறும் பணியினின்று விடுபடுகின்றனர்; எனவே அவர்களது உழைப்பின் ஆற்றலும், காலமும் வேறு வேலைகள் செய்வதில் பயன்படலாம்; அவர்கள் தமதென்றுன கலையைப் பயிற்சி செய்வதிலேயே, தம் காலத்தை முற்றும் செலவிடலாம்; அப்பணியாற்றும் வகையிலேயே தம் ஆற்றலைப் பயன்படுத்தி உழைக்கலாம்: அக்கருமமே கண்ணுயினராகிக் கவனஞ் செலுத்தலாம்; இவற்றின் விளைவாய், அக்கலைஞர், தத்தமக்கான கலைகளில் தேர்ச்சியையும் திறனையும் அடைகின்றனர். தம் தொழிலைச் செய்து விளைவித்த பண்டங்களை மற்றவருக்குத் தந்து, அவற்றிற்கு ஈடாய் உணவுப் பொருள்களைப் பெறுகின்றனர். இந்நிமித்தம், பண்டமாற்று வணிகம் தலைப்படுகின்றது.

முதலில், பள்ளத்தாக்கு நிலங்கள், விரிந்து பரந்த சதுப்பு நிலங்களால் சூழப்பட்ட திட்டுகளாயிருந்தன. அச்சதுப்பு நிலங்களை பயனுறுவண்ணம் திருத்தும் முகத்தான், ஒத்துழைத்து வேலை செய்யும் இயல்பும், கட்டுப்பாட்டுக் குட்பட்டு ஒழுங்கு முறையில் வேலை செய்யும் பழக்கமும், மக்களில் வளர்ச்சி யுறுதற்கு, வழியுண்டாயிற்று. இடம்விட்டு இடம் செல்லும் சமவெளி நாட்டு மக்கள் போலின்றி, படுகை நாட்டின் நிலையான குடிமக்கள், ஆண்டுக்காண்டு, நிலைமாருது தமக்கானதோ ரிடத்திலேயே நிலைத்து, மீண்டும் மீண்டும் ஒரேவாருன வேலைகளைச் செய்து வந்தனர். இவ்வாறு, வேலை செய்து வந்தமையின், அவர்கள் சீரான ஒழுகலாற்றுடன் வேலை செய்யும் பழக்கத்தினராயினர். காலம் மாருத ஒழுங்குடன் ஒரே யொரு வேலையை மேலும் மேலும் செய்து வந்ததானது, அவ்வாறு செய்து வந்தவர் அவ்வத் தொழில்களில் சிறத்தற்குக் காரணமாயிற்று. கூட்டுறவுடன் ஒன்று கூடிய குழுக்களாய் ஒத்துழைத்ததால், மக்கள், 'பெரும் சதுப்பு நிலங்களைத் திருத்தி வளமாக்கல்' என்றதைப் போன்ற அரும் பெருஞ் செயல்கள் பல ஆற்றும் வல்லுனராயினர். இந்நிமித்தம், ஒரு சமுதாயத்தின் பொதுவான அல்லது சமூகவியலான விருப்பத்தினலேற்பட்ட ஆணை பெரிதும் மதிக்கப்பட்டு, அதிகார வன்மையைப் பெற்றது. நாளடைவில் அவ்வதிகாரம் மந்திரத்துடன் உறவுகொண்டு, தெய்வீகத் தன்மையைப் பெற்றது. முதன் முதலாய் சதுப்பு நிலங்களையெல்லாம் வளமான நிலங்களாய் மாறும்படி செய்தவர்கள், அந்நிலங்களையே படைத்தனர் என்ற கருத்து எழுந்து பரவியதால், அவ்வாறு அந்நிலங்களை உண்டாக்கிய மூதாதையர் தெய்வீகத் தன்மையானவர் என்ற ஐதீகம் எழுந்தது. இதனல், அம்மூதாதை தெய்வங்களைக் குறிப்பிடும் அடையாளங்களென பலவற்றைக்கொண்டு, அவற்றை ஆராதனை செய்யலாயினர். நிலையான இருக்கையென்பது அதுகாறும் உலகில் ஏற்பட்டிராத, புதுவகையான சமூக வழக்கம். அவ் வழக்கம், தாம் வாழ்ந்து வந்த இடத்தை

பரிவுடன் பாராட்டும் பற்று, மக்களிடை வலிவுறும்படி செய்தது. அந்நிலத்தின் பாங்குகள் ஒவ்வொன்றும் தமது பெற்ருேருடனும் முன்ஞேருடனும் தொடர்ந்தெழுந்த எண்ணங்களை எழுப்பும் வண்ணமா யிருந்தன. சமூக வியலான ஆணையின் அதிகார மேன்மை நிமித்தம் ஒழுங்கான ஏற்பாட்டு முறையைக் கொண்டு ஆற்றப்பட்ட ஆக்க வியலான அரும்பெரும் செயல்களை, அந் நிலங்கள் நினைப்பூட்டின.

ஒவ்வொ ராண்டும் காலந் தவருது வெள்ளம் பெருக்கிட்ட ஆற்றுநீர்ப் பாய்ச்சலைக் கொண்ட நிலத்தில் வேளாண்மை செய் யப்பட வேண்டியதாயிற்று. அவ் வேளாண்மை நன் முறையில் செய்யப்பட வேண்டிடின், அந்நீர்ப்பரத்தலை அடக்கியாளும் வண்மை யேற்பட வேண்டும். அதாவது, வெள்ளத்தால் எழுந்த நீர்ப்பெருக்கத்தைத் தக்க வகையில் அணைகட்டித் தடுத்துத் தேக்கவும், அந்நீரை வேண்டும் வண்ணம் பாய வைத்தற்கான வாய்க்கால்களும், கழிக்கால்வாய்களும் வெட்டவும் — அவற்றின் ஓரமாய் வரப்புகள் கட்டவும்—ஆனதற்கான அறிவையும், அவற்றின்பாற்பட்ட அநேக வினை செய்வகையான வழிகளையும், அடையவேண்டும். மேலும், அந்நீரால் ஒவ்வொரு வயலும் பாய்ச்சல் பெறும் வண்ணம் செய்தற்கான பகிர்ந்து தரும் முறையும் கண்டுபிடிக்கப்பட வேண்டும். எனவே, மேற்கூறிய வகைகளில் 'புனல் நீர் பரத்தல்' (இரிகேஷன்) செய்தற்கு இன்றி யமையாததான மராமத்து கட்டிட வியல் கலை (எஞ்சினியரிங்) யானது, ஒருவனல் மட்டும் தனியே செய்ய இயலாத தொன்று. அக்கலையாற்றுதற்கு, பலரின் அறிவும், பலரின் வேலையும் அவசியம். கலையறிஞர் பலரும், திறன் மிக்க வினைஞர் பலரும், கூட்டுறவுடன் ஒத்துழைப்பதாலேயே, புனல்—நீர் பரத்தல் முறை நன்கு நிறுவப்படும். மேலும் அம்முறை செவ்வனே யாதற்கு, 'நீர் செல்லும் அழுக்கவியல்' (ஹைட்ராலிக்ஸ்) என்பதின் பாற்பட்ட அறிவில் தேர்ச்சியும், சமூக வியலான முன்காண் அறிவும் (போர்சைட்), திட்டமானதும் ஒழுங்கான தும் ஆன அமைப்புமுறையும், இன்றியமையாதது.

வெள்ள நீர் மலிதலை ஏற்ற வகையில் பகிர்ந்து தருதற்கென ஏற்பட்ட ஆட்சிமுறை, சமூக வியலான ஒழுங்கு பயிற்று முறை நிறுவதற்கேற்ற புதுக்கருவியாயிற்று. ஒருவன் சமூக வியலான விதிகளுக்குக் கீழ்ப்படியா திருக்கலாம்; அல்லது ஒருவன் சம் பிரதாயத்தை யொட்டி யொழுகாததினல், தெய்வங்களை அவ மதித்தவன் என, சம்பிரதாய முறை அனுசரிக்கப் படுதற்கான வகையில் கவனித்துவரும் பொறுப்பை யேற்ற காவலாளிகளால் குற்றஞ் சாட்டப்பட் டிருக்கலாம். அப்பொழுது, அன்னரது நிலங் களுக்கு நீர் பாயாதவாறு நிறுத்தப்படும் எனக் கூறி அவர்களை அடக்கி வழிக்குக் கொண்டு வரலாம். இந்நிலைமை புதுக்கற் காலத்தில் ஏற்பட்டிருப்பின், அதாவது, அக்காலத்துக் குடி யானவ ஞெருவன் தானிருந்த சமுதாயத்தின் சம்பிரதாய முறை திருப்திகரமானதன்று எனக் கருதிஞனயின், அவன், சமுதா

யத்தை விட்டு விலகி புதுப்புலம் நிறுவி யிருப்பான். ஆனால், உலோக காலத்து உழவன் அவ்வாறு செய்ய இயலாதவனானான். ஏனெனில், அவனால், தனியே சதுப்பு நிலங்களைத் திருத்தி புது நிலம் பெறவும், நிலத்திற்கு வேண்டிய நீர்பாய்ச்சலை அடையவும் இயலாது.

புதுவகை யானவையான வலி மிக்கவும், திறன் மிக்கவுமான ஆக்கத் தொழின் முறைகளும், அவை நடைபெறுதற்கானதான புதுவகையான சமூக அமைப்பு முறையும் நிறுவப்பட்டதின் நிமித்தம், குடிமக்களின் தனிப்பட்ட வியலான உரிமைகளையும், தன்னிச்சையான நடமாட்டங்களையும், தாமே பணிகளை முதலிடும் இயலையும், ஒடுக்கும் வகையாயமைந்த புதுவியலான வரம்புகள் எழுந்தன. தொழில்கள் சிறப்புற்று வளர்வுற்றதாலும், சமூக வியலான அதிகாரத்தின் வன்மை மிகைப்பட்டது. ஏனெனில், தொழுவர், தாமே பயிரிட்ட வகையில் உணவைப் பெறாததால், உணவுப் பொருள்களைப் பெற சமுதாயத்தின் ஆதரவை நாட வேண்டியதாயிற்று. உழவரும், தமக் கின்றியமையாததான நீரைப் பெறுதற்கு சமுதாயத்தையே நம்பவேண்டிய தாயிற்று. புதுக்கற்காலத்துக் குடியானவன், தனது உழைப்பினின்றே, தனக்கு வேண்டிய உணவைப் பெற, இடமிருந்தது. வலிமிக்க அதிகாரத்தின் துணைகொண்டே, உலோக காலத்து உழவரும், தொழுவரும், கலைஞரும், அறிஞரும் பட்டினியால் வாடாது. தப்புதற்கான உணவையும், தத்தம் வினைத்திறனால் விளைவித்த பொருள்களுக்கீடான பிறவற்றையும் பெற இயலும். தொழில் களும், கலைகளும், பலவகைகளில் தனித்தனியே சிறத்தலால் அவற்றை இணைக்கும் சமூக வியல் சிக்கலாகின்றது.

இவ்வகையான சிக்கல்களை நன்கு கவனித்து, ஆராய்ந்து சிந்தனை செய்து, அவற்றைப் பொதுநலம் பேணும் வழியாய் விளக்குதற்கான வகைகளைக் கண்டுபிடித்தற் கேற்ற கூர்த்த மதியும், பரந்த அறிவும், வினைத்திறனும், பலரையும் நேர்மை யுடன் அடக்கியாளும் வன்மையும், ஒழுங்கான முன்னேற்பாடுகள் செய்யும் தேர்ச்சியும், வாழ்க்கையின்பாற் பட்டவையும், திட்டமாய் வரையறுக்கப்பட்டவையும் ஆன விதிகளை நிர்மாணஞ் செய்யும் ஆற்றலும் எல்லாவற்றையும் ஆக்கவகையில் பெருக்கும் வண்ண மான, திருந்திய சமூக அமைப்பை உருவாக்கும் தெளிந்த அறி வும், பொதுநலக் கருத்தில் தோய்ந்த நோக்கமும், கொண்ட சமூக ஆட்சி முறை நிறுவப்படவேண்டிய தேவை யேற்படுகின் றது. இதனால், சமூகவியல் — சமூக அமைப்பு முறை — ஆட்சி முறை—பொருள்களை விளைவித்து விநியோகிக்கும் முறை—இன் னோரன்னவற்றின்பாற்பட்ட அறிவையும், வினைசெய் வகைகளை யும் பற்றி எடுத்துரைத்து விவ க்கும் 'சமூகவியல் நூல்' (ஸோஷியாலஜி), 'ஆட்சியியல் நூல்' (பொலிடிகல் ஸயன்ஸ்), 'பொருளியல் நூல்' (இகனமிக்ஸ்) என்ற அறிவியல் நூல்கள் எடுத்து வரைகின்றன. (தொடரும்)

# சித்திரமும் கைப்பழக்கம்

("கார்த்திகேயன்")



எனதாருயிர்த்தோழி கமலவல்லிக்கு,

கமலா! உன்னுடைய அன்புக் கடிதங்கள் பலவும் வரப் பெற்றேன். லிகிதம் வரைவதில் வர வர நீ மிகத் தேர்ச்சியடைந்து வருகிறாய் என்பதையும் நான் காணுகின்றேன். எதுவும் பழக்கத்தால் சிறப்புறும் என்பதற்கு உன் நிருபங்களே சான்றாக நிற்கின்றன.

'சித்திரமும் கைப்பழக்கம்' என்று நம் ஔவைப் பிராட்டியார் சொல்லியருளியதில் உண்மைக்கருத்து இன்றுதான் கண்டேன். முன்னே அதே சொற்றொடரை நான் கண்டபோது என் உள்ளத்தே ஒரு குறுகிய பொருள் தான் தோற்றியது. ஆனால் இன்று அது ஒரு பரந்த உண்மையை விளக்குவதாகின்றது. எந்தப் பொருளிலும், ஆழ்ந்து காணும்போது—அனுபவித்துச் சுவைக்கும்போது ஒரு புதிய அழுத்தமான உண்மை வெளி வருவது இயல்பாகிறது.

இந்தக் கொள்கையை விளக்க உனக்கு ஒரு உதாரணம் கூறித்தான் ஆகவேண்டும்; நல்லது கமலா! 'பக்தி' என்று சொல்லும்போது அந்தப் பதத்திலே உனக்குத் தோன்றும் பொருள் யாது? 'இறைவனிடத்திலே செலுத்தும் அன்பு' என்று வெகு சுலபமாக நீ விடையளித்து விடுவாய். ஆனால் இந்த பதில் உண்மையில் போதவே போதாது. இது வெறும் சுவையற்ற பொருளேயாகும். பின் சரியான பொருள்தான் யாது?

முன் ஒரு கடிதத்திலே உன் குழந்தைக்குச் சுரங் கண்டு படுத்த படுக்கையாகப் பலநாள் கிடந்து நலிவுற்றபோது நீ உன் குலதெய்வத்தை இடையறாது துதித்துத் தொழுத வண்ணமாக இருந்தேன் என்று வரைந்துள்ளாய் அல்லவா? அந்தக் காலத்திலே உன் மனோ நிலை எப்படியிருந்தது? உன் உள்ள அநுபவம் எத்தகையதாயிருந்தது என்று கொஞ்சம் சிந்தித்துப் பார்! மெய் சிலிர்க்க, உள்ளங் குழைய, நா குழற, கண்ணீர் பெருகி வழிய நீ அனுபவித்த ஒரு உணர்ச்சியல்லவா பக்தி! இப்போது புரிகிறதா பக்தியின் உண்மையான பரந்த பொருள் யாதென்று?

இதுபோலவே, இன்று 'சித்திரமும் கைப்பழக்கம்' என்ற சொற்றொடருக்கு நான் கண்டறிந்த பரந்த உண்மைப் பொருளும். இந்தச் சொற்றொடரைச் சொல்லுங்கால் உன் உள்ளத்தே தோன்றும் பொருள் 'நல்ல அழகிய சித்திரங்களெல்லாம் கைப் பழக்கத்தால் வருவன' என்பதேயன்றோ! பன்முறை தீட்டிய பழக்கத்தால் சிறந்த ஓவியம் அமையும் என்பது தானே உன்

கருத்து! அப்படித்தான் நானும் முதலில் எண்ணியிருந்தேன். இதைத்தான் நான் மேலே குறுகிய பொருள் என்று குறிப்பிட்டது.

'சித்திரம்' என்னும்போது சித்திரக்காரன் ஒருவன் தன் சலாகை கொண்டு தீட்டும் ஓவியத்தை மட்டும் குறிப்பிடுவதல்ல என்பதுதான் நான் இப்போது கண்ட உண்மை. எழுத்தும் ஒரு சித்திரமாகத்தான் எனக்குத் தோன்றுகின்றது. பள்ளியில் பயிலும்போது ஆசிரியர்கள் கற்பலகையிலும், காகிதத்திலும், அவர் எழுதித் தந்த ஒரே வரியைப் பலமுறை எழுதுமாறு நம்மெல்லோரையும் பணித்த செயலைச் சிந்தித்தால் இந்த உண்மை புலனும். ஒரே எழுத்தைப் பன்முறை வரைவதால் அது இறுதியில் நல்ல உருவத்துடன் அமையும் என்ற அனுபவமே இதற்குக் காரணமாகும்.

இங்ஙனம் பல முறை எழுதுங்கால் கை திருத்தமாக எழுத வேண்டிக் கண்களும் அந்த எழுத்தின் வடிவை மேலும் மேலும் ஊன்றிக் கவனிக்கின்றன. உள்ளம் மட்டும் சோம்பிக் கிடக்கிறதா என்ன? இல்லவேயில்லை. அதுவும் எழுத்தின் அமைப்பைக் தன்னுள்ளத்தே தீட்டிக் கொள்ளுகிறது. இப்படிக் கைப்பழக்கத்துடன் கண் பழக்கமும், மனப்பழக்கமும் ஒன்றுகும் தத்துவத்தைக் கொஞ்சம் சிந்தித்துப் பார்!

எழுத்துகள் சேர்ந்து சொல்லாகின்றன. சொற்கள் பல கூடி சொற்றொடர் வாக்கியங்களாகின்றன. வரிவடிவிலே எழுத்துக்களைச் சித்திரமாகத் தீட்டும்போது காணப்படுவது ஒரு அழகு. இந்தக் காலத்தே வெளிவரும் பற்பல ஆண்டு—மாத—வார மலர்களை (சஞ்சிகைகளை) எடுத்து விரித்துப் பார். தலையங்கங்கள்—தலைப்புகள் எல்லாவற்றிலும் எழுத்துக்களுக்கு விதவிதமான அலங்காரம்! சிங்காரமான நூதன வடிவமைப்பு! அவற்றைப் பார்த்துக்கொண்டிருந்தாலே போதும்! பிறிருக்கும் செய்திச் சரக்கில் கூட மனம் பாய மறுக்கிறது.

கமலா! இன்னும் நான் என் பரந்த கருத்துக்கு வரவில்லை. வரிவடிவுமட்டுமே சித்திரமாகும் என்ற கொள்கையுடன் நின்றுவிட என் மனம் ஒப்பவில்லை. சொற்றொடர்கள் — வாக்கியங்கள் பல ஒன்றையொன்று நேரிய முறையில் தொடரும்போதுதான் என் உள்ளச் சித்திரம் புலப்படுகிறது.

சொற்களை அடுக்கடுக்காக அழகுபட தொகுத்துச் சொல்லிவிட்டால் மட்டும் போதாது. கருத்தும் கற்பனையும் வேண்டும். அப்போதுதான் சித்திரம் பரிபூரணமாகிறது. 'கம்பன் சித்திரம் தீட்டியிருக்கிருன்' என்றால் உனக்கு வியப்பாயிருக்கும். கொஞ்சம் ஊன்றிக் கவனித்தால் அந்த உண்மை புலப்பட்டு விடும். அவன் பாடிய ராமாயணம் முழுதும் சித்திரந்தான்; எத்தனையோ சித்திரங்களைத் தன்னகத்தே கொண்டதுதான். இல்லாவிட்டால்

அந்தப் பாட்ல்களைச் சொல்லும்போதும் கேட்கும்போதும் எப்படி நம் உள்ளத்தே அந்தக் கவின்பெறு காட்சிகள் தோன்றக்கூடும்?

நல்லது கமலா! 'சித்திரமும் கைப்பழக்கம்' என்றதாலே சித்திரம் வரைய கைப்பழக்கம் மட்டும் போதுமா என்று நீ கேட்கலாம். வெறும் கைப்பழக்கம் என்ன அற்புதத்தைச் செய்துவிட் முடியும்? ஒரு சிறு மார்க்கோலம் போடவேண்டுமானாலும் கண்ணையும் கருத்தையும் ஒன்றச் செய்தால் தானே அது சிறக்கிறது! அவ்வாறிருக்க, ஒரு அழகிய இலக்கிய சித்திரம் வரைய கண்ணும் கருத்தும் பொருந்தாமல் முடியுமா?

இயற்கை யன்னையின் சௌந்தர்யத்தைக் கண்டு மகிழ கண் வேண்டும்; மனம் வேண்டும். பிறகு அந்த அனுபவத்தைத் தீட்ட கரம் வேண்டும். இவை மூன்றும் ஒன்று கூடும்போது தான் அந்தச் சிறந்த இலக்கிய ஓவியம் உருவடைகிறது! இந்தப் பரந்த பொருளைத்தான் என் உள்ளம் 'சித்திரமும் கைப்பழக்கம்' என்ற சொற்றொடரிலே கண்டது!

உனது கடிதங்களிலே இந்த இலக்கிய ஓவியம் உயர்ந்து வருவதைக் காண்கிறேன். மெத்த மகிழ்கிறேன்.

உனது அன்புள்ள
சிவகாமி.

---

# தேன் துளிகள்

1. மரணம் என்பது ஏதோ தற்செயலாக நிகழ்வதல்ல. முன்னேற்பாடாகவே ஆண்டவனால் வரையறுக்கப்பட்டுள்ளது.

2. இசை ஞானமில்லா உள்ளத்திற்கும் கொலைஞன் உள்ளத்திற்கும் வித்தியாசம் என்னால் காணக் கூடவில்லை.

3. ஓர் பச்சிளங்குழந்தை கண்ணுறங்கும் காட்சியை விட, நிர்மலமான பிரம்மானந்தமான காட்சி உலகில் வேறொன்றும் கிடையாது.

4. இவ் வன்நெஞ்சக் கொலைஞனுக்கு எவ்வளவு வசீகரமான சிரிப்பை ஆண்டவன் கொடுத்திருக்கிறார்.

5. காதலுக்கும் காமத்திற்கும் உள்ள ஒற்றுமை பகலுக்கும் இரவிற்கும் உள்ள ஒற்றுமையைப்போல.

6. ஏகாந்தத்தில் இனிமை கண்டோன் கலைஞன்.

7. பெண்களிடம் அதிக நம்பிக்கை வைப்போன் துன்பங் காப்போன்.

8. பொறுமையும் சாந்தமுந்தான் உண்மை பலம்.

9. இறந்த காலத்தைத் தனக்கு வழி காட்டியாகக் கொண்டு நிகழ் காலத்தில் காலதாமதமின்றி தன் கடமையைச் செவ்வனே செய்து எதிர் காலத்தை நோக்கிச் செல்வோன் புத்திசாலி யாவான்.

—சு. ரா. தங்கவேலு.

# மூல காரணம்

## லியோ டால்ஸ்டாய்



(சென்ற இதழ் தொடர்ச்சி)

*மார்:*—என்ன அது? [அவனுக்கு ஒரு கோப்பைத் தேநீர் கொடுக்கிறாள்]

*பிர:*—மெர்ஸி. அதாவது என் தகப்பனார் ஒரு பேர்லிஷ் பிரபு. அதோடு எனக்குப் பல தகப்பனார்கள் உண்டு; எனக்குத் தாயார் கூட இரண்டு.

*அகூ:*—அட தெய்வமே! அது எப்படி?

*பிர:*—என் தாயார் காமவெறி பிடித்துப் போய் பல பேரை மணந்ததால் பலவகையான தகப்பனார்கள் எனக்கு. இரண்டு தாயார்கள் எதற்கென்றால், என்னைப் பெற்ற தாயானவள் என் சிறு வயதிலே என்னை விட்டு விட்டு எங்கோ போய்விட்டாள். ஆகவே ஒரு போர்ட்டருடைய மனைவி என்மீது இரக்கம் கொண்டு என்னை எடுத்து வளர்த்தாள். பொதுவாகவே என் சரித்திரம் அநேக கஷ்ட நஷ்டங்கள் நிறைந்தது.

*மார்:*—இன்னொரு கோப்பை வேண்டுமா? சரி, நீ ஏதாவது படித்திருக்கிறாயா?

*பிர:*—என் படிப்பும் நுட்பம் இல்லாத படிப்புத்தான். என் படிப்புக்காக என் தாயார் ஒன்றும் செய்யவே இல்லை. என்னை வளர்த்த தாய்தான் ஒரு கொல்லனிடம் என்னை வேலை பழக விட்டாள். அந்தக் கொல்லன்தான் என் முதல் வாத்தியார். அவனுடைய வாத்திமைத்தனம் எல்லாம் இதுதான்—அதாவது அவன் என் துரதிர்ஷ்டம் பிடித்த தலையில் அடித்த அளவுக்கு பட்டரையில் அடித்திருக்க மாட்டான். எப்படி அடித்தபோதிலும் எனக்குக் காசு கொடுப்பதில் இல்லை என்று சொல்லமாட்டான். அதற்கப்புறம், நான் ஒரு பூட்டு வேலைக்காரனிடம் போய் வேலை கற்றேன். பிறகு ஓவர்ஸியர் ஆனேன். படித்த மனிதர்களை அறிமுகமாக்கிக் கொண்டு ராஜீயப் புரட்சிக் கட்சியில் சேர்ந்தேன். பகுத்தறிவுள்ள மனிதனைப்போல் நடந்துகொள்ள என்னால் முடிந்தது. என் வாழ்க்கையே உன்னதமான நிலைமையை அடைந்திருக்கும். ஏனென்றால், நான் ஏராளமான பணம் சம்பாதித்து விட்டேன்.

*அகூ:*—சரி, அப்புறம்?

*பிர:*—அந்த சமயத்தில் தான் ஒரு தடங்கல் ஏற்பட்டது. மக்கள் வாழ்வை நசுக்கும் கொடுங்கோன்மையின் நுகத்தடியாகிய

---

கு. அழகிரிசாமி மொழி பெயர்த்தது.

ஜெயிலுக்குப் போனேன்; அதாவது சுதந்திரச் சிறைவாழ்க்கையை அனுபவித்தேன்.

மார்:—எதற்காக ஜெயில்?

பிர:—எங்கள் உரிமைகளுக்காக.

மார்:—என்ன உரிமைகள்?

பிர:—என்ன உரிமைகளா? அதாவது, பூர்ஷுவாக்கள் சுகபோகத்தை அனுபவித்துக்கொண்டே இருக்கக்கூடாது; வேலை செய்யும் உழைப்பாளிகள் தங்கள் உழைப்பின் பலன்களைப் பெற வேண்டும் என்பவைதான்.

அகூ:—அதாவது நிலத்தைத் திரும்பிப் பெறுவதற்காக. அப்படித்தானே?

பிர:—ஆம், விவசாயிகளின் பிரச்சினையும் கூடத்தான்.

அகூ:—கடவுள் பார்த்துத்தான் அதைக் கொடுக்கவேண்டும். *நாங்களும் நிலம் கேட்டவர்கள்தான். சரி, இப்போது நிலைமை எப்படி இருக்கிறது?

பிர:—இப்பொழுதா? நான் மாஸ்கோவுக்குப் போகிறேன். தொழிலாளிகளைச் சுரண்டும் ஒரு முதலாளியிடம் போய், மிகவும் பணிவாக என் சாப்பாட்டுக்காவது ஏதாவது வேலை கொடுக்கும்படி கேட்பேன். இப்படி கேட்காமல் தீராதுதான்.

அகூ:—நல்லது, இன்னும் கொஞ்சம் டீ சாப்பிடு.

பிர:—நமஸ்காரம்; அதாவது மெர்ஸீ.

[வெளியே பேச்சுக்குரல் கேட்கிறது.]

அகூ:—இதோ மைக்கேல் வந்து விட்டான். சரியான சமயந்தான். டீ சாப்பிடுகிற நேரத்துக்கு.

மார்:—[எழுந்திருக்கிறாள்] ஓ, இக்னாத்தும் கூட வந்திருக்கிறான்; அதாவது அவர் குடித்திருக்கிறார் என்று அர்த்தம்.

[மைக்கேலும் இக்னாத்தும் தள்ளாடிக் கொண்டே உள்ளே வருகிறார்கள்.]

இக்னாத்:—எல்லோரும் சௌக்கியம் தானே?

[கிறிஸ்துநாதர் சிலையைக் கடந்து வருகிறான்.]

இதோ சரியான நேரத்துக்கு டீ சாப்பிட வந்து விட்டோம்.

போனோம் சர்ச்சுக்கு; பூஜை முந்திவிட்டது.
விருந்துக்குச் சென்றோம்; விருந்து முந்தி விட்டது.
மதுக்கடை சென்றோம்; மதுவினைக் குடிக்க.

---

*அந்த காலத்தில் விவசாயிகளுக்கு நிலம் வேண்டியிருந்த அவசியத்தையும், குத்தகை முறையின் உத்தரவாதமின்மையையும், டால்ஸ்டாய் **Fruits of Enlightenment** என்ற தம் நாடகத்திலும் மற்றும் பல வியாசங்களிலும் எடுத்துக் காட்டினார். ஆனால் போல்ஷுவிக்குகள் அதிகாரம் அடைகிறவரைக்கும் அவருடைய எச்சரிக்கைகள் கவனிப்பாரற்றுக் கிடந்தன.

ஹா, ஹா, ஹா! நீங்கள் எங்களுக்கு டீ கொடுங்கள். உங்களுக்கு நாங்கள் சாராயம் கொடுக்கிறோம். அதுதான் சரி. [சிரிக்கிறான்.]

மைக்கேல்:—இந்தப் பிண்டம் எங்கிருந்து வந்தது?

[பிரயாணியைக் காட்டுகிறான். தன் கோட்டுப் பையிலிருந்து ஒரு சீசாவை எடுத்து மேஜைமீது வைக்கிறான்.]

சில கோப்பைகள் கொண்டுவா.

அகூ:—நல்லது. உனக்கு எல்லாம் சரியாய்ப் போய் விட்டதா?

இக்:—ஊஹூம்; குடித்தோம். கொஞ்சம் வீட்டுக்குக் கொண்டு வந்தோம்.

மைக்:—[கோப்பைகளில் சாராயத்தை நிரப்பி, ஒன்றைத் தன் தாயாருக்கும், மற்றொன்றை பிரயாணிக்கும் கொடுக்கிறான்.] நீயும் குடி!

பிர:—[கோப்பையை எடுத்துக்கொண்டு] என் இருதய பூர்வமான வணக்கம். நீ சுகமாக இருப்பாய். [கோப்பையைக் காலி செய்கிறான்.]

இக்:—சரியான ஆள் தான்! பெருங்குடியன் போலிருக்கிறது! பசிதான் அந்தச் சாராயத்தை அவன் நரம்புகளில் பாய்ச்சுகிறது என்று நினைக்கவேண்டி யிருக்கிறது. [இன்னும் கொஞ்சம் ஊற்றுகிறான்.]

பிர:—[குடிக்கிறான்.] நீங்கள் எடுத்த காரியங்கள் எல்லாவற்றிலும் வெற்றி உண்டாகட்டும்!

அகூ:—நல்லது, வைக்கோலை சரியான விலைக்கு விற்றாயா?

இக்:—சரியான விலையோ இல்லையோ, எல்லாவற்றையும் குடித்து விட்டோம்! நான் சொல்லுகிறது சரிதானே, மைக்கேல்?

மைக்:—இதென்ன, ரொம்ப சரி, பார்த்துக் கொண்டிருப்பதற்கா பணம்? நூறு வருஷங்களுக்கு ஒரு தடவையாவது ஒருவன் கொஞ்சம் குஷாலாய் இருக்கவேண்டாமா?

மார்:—என்ன, பெருமை அடித்துக் கொள்ளுகிறீர்கள்? அது கொஞ்சம் கூட நன்றாயில்லை. சாப்பிடுவதற்கு எங்களுக்கு ஒன்றும் இல்லாதபோது நீங்கள் என்ன வேலை செய்தீர்கள்?

மைக்,—[பயமுறுத்தும் தோரணையில்] மார்த்தா!

மார்:—மார்த்தாவுக்கு என்ன? நான் மார்த்தாவென்று எனக்குத் தெரியும். உங்களைப் பார்க்கக்கூட எனக்கு எரிச்சலாய் இருக்கிறது.

மைக்:—மார்த்தா! பார். இங்கே!

மார்;—அங்கே பார்க்க ஒன்றும் இல்லை; எனக்குப் பார்க்கவும் இஷ்டம் இல்லை.

மைக் :—சாராயத்தை ஊற்றி எல்லோருக்கும் கொடு.

மார்:—சீ, உங்களோடு பேச எனக்கு இஷ்டம் இல்லை.

மைக்:—பேச மாட்டாயா? உதவாக்கரையே. என்ன சொன்ணுய்?

மார்:—[தொட்டிலை ஆட்டுகிருள். பராஷ்கா பயந்து போய் அவள் பக்கம் வருகிருள்.] என்ன சொன்னேன்? உங்களோடு பேச எனக்கு இஷ்டம் இல்லை என்று சொன்னேன். அவ்வளவுதான்.

மைக்:—மறந்து விட்டாயா? [மேஜையி லிருந்து குதித்து அவள் தலையில் அடிக்கிருன்] ஒண்ணு!

மார் —ஐயோ, ஐயோ, ஐயோ. [அழுதுகொண்டே கதவின் பக்கம் ஓடுகிருள்.]

மைக் :—நீ வெளியே போய்விட முடியாது, துஷ்டே! [அவள் பக்கம் பாய்கிருன்]

பிர :—[மேஜையிலிருந்து குதித்து அவனுடைய கையைப் பிடித்துக் கொள்ளுகிருன்.] உனக்கு இப்படிச் செய்ய உரிமை கிடையாது.

மைக் :—[நின்று, ஆச்சரியத்தோடு பிரயாணியைப் பார்க்கிருன்] நீ உதைபட்டு நாளாய்விட்டதா?

பிர:—பெண்களைக் கேவலத்துக்கு உள்ளாக்க உனக்கு உரிமை இல்லை.

மைக்:—அடே, நாய் மகனே, நீ இதைப் பார்த்தாயா? [தன் கை முஷ்டியைக் காட்டுகிருன்.]

பிர:—பெண்களைக் கைக் கருவிகளாய் உபயோகித்துச் சுரண்டும் வேலையை நான் அனுமதிக்கமாட்டேன்.

மைக்,—நீ எப்படிப்பட்ட மோசமான நிலையில் இருக்கிருய் என்பதைக் காட்ட சரியான பாடம் கற்பிப்பேன்.

பிர:—அப்படியானுல் நீ அடி!

[தன் முகத்தைக் காண்பிக்கிருன்.]

மைக்:—[தோள்களைக் குலுக்கிக் கொண்டு கைகளை நீட்டுகிருன்.] அப்படியானுல் உன் இஷ்டப்படி நான் நடக்கவா?

பிர:—நீ அடி!

மைக்;—சரியான பயல்தான் நீ. இதோ உன்னைப் பார்க்கிறேன் [தன் கைகளைக் கீழே போட்டு தலையை ஆட்டுகிருன்.]

இக்:—[பிரயாணியைப் பார்த்து] பெண்களிடத்திலே உனக்கு ரொம்ப ரஸனை போலிருக்கிறதே!

பிர:—அவர்களுடைய உரிமைகளுக்கு நான் ஆதரவாய் நிற்கிறேன்.

மைக்:—[பெருமூச்சு விட்டுக்கொண்டு, மேஜையின் பக்கம் போகும்போது மார்த்தாவைப் பார்த்து] சரி, மார்த்தா! அவ

னுக்கு வெளிச்சத்துக்காக ஒரு பெரிய மெழுகு வர்த்தியைக் கொண்டு வந்து வை. அவன்மட்டும் இல்லாவிட்டால் உன்னைச் சட்னியாக்கி இருப்பேன்.

மார்:—உங்களிடத்தில் வேறு என்ன எதிர்பார்க்க முடியும்? காலம் எல்லாம் ரொட்டி சுட, சமையல் செய்ய என்று நாங்கள் சங்கட்டப்படவேண்டியதுதான்..........

மைக்:—சாப்பிடு. சாப்பிடு. [பிரயாணிக்குச் சாராயம் கொடுக்கிறன்.] குடி. [மனைவியைப் பார்த்து] என்ன உளறுகிறாய்? நான் கொஞ்சம் குஷியாய் இருக்கவேண்டாமா? இதோ! [பணத்தைக் கொடுக்கிறன்] கொண்டு போய் வை. இரண்டு மூன்று—ரூபிள் நோட்டுகளும் நாற்பது கோபெக்குகளும் இருக்கின்றன.

மார்:—தேயிலையும் சர்க்கரையும் வாங்கிக் கொண்டுவரச் சொன்னேனே?

மைக்:—[பையிலிருந்து ஒரு பொட்டலத்தை எடுத்து மனைவி கையில் கொடுக்கிறன். மார்த்தா பணத்தையும் பொட்டலத்தையும் ஒரு சின்ன அறைக்குள் கொண்டுபோகிறாள்.] என்ன அறிவில்லாத கூட்டமடா இந்தப் பெண்கள்! [மறுபடியும் பிரயாணிக்குச் சாராயம் வார்க்கிறன்.] குடி.

பிர:—[மறுத்துவிட்டு] நீயே அதைக் குடி!

மைக்:—தொந்தரவு செய்யாதே, வா.

பிர:—[குடித்துக்கொண்டே] உனக்கு வெற்றி உண்டாகட்டும்.

இக்:—[பிரயாணியைப் பார்த்து] நீ விதவிதமான காட்சிகளை எல்லாம் பார்த்திருப்பாய் என்று நினைக்கிறேன். அட, என்ன அழகான கோட் போட்டிருக்கிறாய்! புது தினுசு போலிருக்கிறதே! இதை எங்கே வாங்கினாய்? [பிரயாணியின் கந்தல் சட்டையைக் காட்டிக்கொண்டு] இதைத் தைக்கச் செய்ய வேண்டாம், இப்படியே இருக்கட்டும். இதுதான் அழகாய் இருக்கிறது. வருஷக்கணக்காக இது உன்மேலே கிடக்கிறது என்று நினைக்கிறேன். ஐயோ, எனக்குமட்டும் இப்படி ஒரு கோட் இருந்தால்—என்னிடத்திலும் பெண்கள் மயங்குவார்களே! [மார்த்தாவைப்பார்த்து] இல்லையா?

அகு:—இக்னத், அப்படியெல்லாம் சொல்லாதே. அவனைப் பற்றி ஒன்றும் தெரியாதபோது அவனை ஏன் பரிகாசத்துக்கு உள்ளாக்குகிறாய்?

பிர.—அவனுக்குப் படிப்பில்லாதது தான் அதற்குக் காரணம்.

இக்:—நான் சிநேகித முறையில் சொன்னேன். இதோ, குடி. [சாராயம் வார்க்கிறன்]

அகு:— அவனே சொல்லுகிறான் — அதெல்லாம் கெட்ட சைத்தானுடைய வேலை என்று. அதனால் அவன ஜெயிலுக்குக் கூட போயிருக்கிறானாம்.

மைக்:—எதற்காக ஜெயிலுக்குப் போனாய்?

பிர:—[குடிபோதையில்] இன்னொருவனிடமிருந்து அவன் சொத்தைப் பகிரங்கமாகப் பறித்தேன்; அதனால்தான்.

மைக்:—அப்படி என்றால்?

பிர:—அதாவது கொழுத்துத் தொந்தி தள்ளிய ஒரு பணக்காரனிடம் போனேன். போய், 'என் பணத்தைக் கொடு. இல்லாவிட்டால் இதோ லிவால்வர் * இருக்கிறது' என்று சொன்னேன். அவன் இப்படி அப்படி உருட்டிப் பார்த்தான். கடைசியில் 2300 ரூபிள்களைக் கொடுத்துவிட்டான்.

அகு:—அட தெய்வமே!

பிர:—நாங்கள் அதைச் சரியான வழியில்தான் வாங்குவது. ஸெம்ப்ரிக்காவ்தான் எங்கள் தலைவன். அப்புறம் அந்தக் காக்கைமூஞ்சிக்காரர்கள் என்னைக் கைதுசெய்து ஜெயிலுக்குள் அடைத்துவிட்டார்கள்.

இக்:—பிறகு, பணத்தைப் பிடுங்கிக்கொண்டார்கள்?

பிர:—ஆமாம். ஆனால் அவர்கள் என்னைக் குற்றம் சாட்ட மட்டும் முடியாது. விசாரணை நடக்கும்போது நீதிபதி, 'நீ பணத்தைத் திருடியிருக்கிறாய்' என்று சொன்னார். நானும் நேருக்கு நேராய், 'திருடர்கள் திருடுவார்கள். ஆனால் நாங்கள் எங்கள் கட்சிக்காகப் பகிரங்கமாகப் பணம் பறித்தோம்' என்று பதில் சொன்னேன். அவருக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை. எனக்கு அவரால் பதில் சொல்ல முடியுமா? கடைசியில் 'அவனை ஜெயிலில் போடுங்கள்' என்று சொன்னார்.— அதாவது சுதந்தரமான வாழ்க்கையை அனுபவிப்பதற்குத் தான்.

இக்:—கெட்டிக்காரக் கழுதை! நல்ல பயலடா! [சாராயம் வார்க்கிறான்.] நாய் மகனே, குடி!

அகு:—சீ, எவ்வளவு ஆபாசமாகப் பேசுகிறாய்!

இக்:—நானா, பாட்டி? நான் அவன் தாயாரைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை. நான் பேசுகிற முறையே அப்படி. நீ நாசமாய்ப் போனாய்!..........சுகமாக இரு பாட்டி.

[மார்த்தா திரும்பிவந்து மேஜையின்பக்கம் நின்றுகொண்டு தேநீரை ஊற்றுகிறாள்]

மைக்:—சரி போதும். நான் பேசுவதையும் குற்றமாய் எடுத்துக்கொள்ளாதே! அவனுக்கு என் வணக்கம். [பிரயாணிக்கு] நீ என்ன நினைக்கிறாய்? [மார்த்தாவைக் கட்டித் தழுவுகிறான்.]

* 'ரிவால்வர்' என்பதற்கு 'லிவால்வர்' என்று தப்பாக உச்சரிக்கிறான்.

# வால்மீகி



(S. M. ஸந்தானம்)



வட இந்தியாவில் ஓர் காடு, வேனிற்காலம்; வெயிலின் கொடுமை சகிக்க முடியாத நிலைமையில் இருந்தது. ஆதித்தன் தன் கிரணங்களை செங்குத்தாக் ஆட்சி செலுத்தி வந்தான். மான் கூட்டங்கள் கானலை தண்ணீரென்று ஏங்கி, எண்ணி, ஏமாறுகின்றன. கொடிய காட்டிற்குகந்த லட்சணங்களெல்லாம் அங்கு இருக்கின்றன. இக்காட்டில் வேடன் ஒருவன் வசித்து வந்தான். அவன் திடகாத்திரன். கன்னெஞ்சன். வெயிலின் கொடுமை தாளாது ஓர் மரத்தின் நிழலில் இளைப்பாறிக் கொண்டிருந்தான்.

அவ்வழியே, பட்டாடை தரித்தும், காலில் பாதரக்ஷையுடனும், கையில் திருவோட்டுடனும் ஒரு வேதியர் போய்க்கொண்டிருந்தார். இதைப் பார்த்த வேடன் அவரை வழி பறிக்க எண்ணி அருகில் ஓடி பயமுறுத்தினன். அந்த பிராமணன் மிகவும் பயந்து எல்லாவற்றையும் (பாதரட்சை உள்பட) கொடுத்து கொஞ்ச தூரம் சென்றான். வெயிலின் தகிக்க வொண்ணாத உஷ்ணத்தில் தன்னுடைய கால்கள் தரையில் நடக்க முடியாதபடி ஓர் புற்புதரின் மேல் நின்றான். இதைக் கண்ணுற்ற வேடனின் மனமும் இளகிற்றென்றால் அக்கொடிய வெயில் எத்தன்மையதாயிருக்க வேண்டும். பின்னர் வேடன், அப்பிராமணன் அருகிற் சென்று பாதரக்ஷைகளை மாத்திரம் திருப்பிக் கொடுத்து விட்டான். பிராமணன் புன்னகை செய்து, வேடனை நோக்கி, "ஏ வேடனே, நீ பூர்வ ஜென்மத்தில் புண்ணியம் செய்திருப்பதின் பலனே, இத்தருணத்தில் எனக்கு இப்பாதரக்ஷைகளை தானம் செய்தது," என்றார்.

வேடன் நகைத்தும், வியப்புற்றும், "என் பூர்வஜென்மம் யாது? எனக்கு கூறவேண்டும்" என்றனன். அதற்கு அவ்வழிப்போக்கர் கூறுகின்றார்.

---

என் வயது சென்ற மனைவியை நான் காப்பாற்றுகிறேன் பார். நான் எப்படிப் போஷிக்கிறேன். ஒரு வார்த்தையில் சொன்னால், என் மனைவி ரொம்ப முதல்தரமானவள். யாருக்காக வேண்டியும் நான் அவளை ஒன்றும் செய்யமாட்டேன்.

இக்:—அதுதான் சரி. பாட்டி, சாப்பிடு! உன்னைக் கவனித்துக்கொள்ள நான் இருக்கிறேன்.

பிர:—அது என்னவென்றால்—அதுதான் அந்தப் போதைச் சக்தி! ஒரு பக்கம் துயரத்தில் ஆழ்ந்து கிடக்கிறார்கள்; ஆனால் உங்களுக்கோ ஒரு கவலையும் கிடையாது. சிரிப்பும் சிநேகமும் தான். பாட்டி, உங்களை நான் நேசிக்கிறேன். ஒவ்வொருவரையும் நேசிக்கிறேன். அன்பான சகோதரர்களே! [புரட்சிப் பாட்டைப் பாடுகிறான்.]

மைக்:—அவனுடைய பசி நேரத்தில் அந்தப் பாட்டு அவனைப் பிடித்துக்கொண்டது.

(தொடரும்)

"சாகல மெனும் தேசத்தில் அந்தணர் குலத்தி லுதித்த ஒரு மறையவன் வசித்து வந்தான். நித்யானுஷ்டானம் தவருமல் இருந்தான். அவனுக்கு ஒரு மனைவி. அம்மாது மகா உத்தமி. கொழுநனே தெய்வம் என்ற கொள்கை யுடையவள்.

இவ்வாறிருக்க,

ஓர் நாள் கோவிலில் தாசி காந்தாமணியின் நாட்டியக் கச்சேரி நடந்து கொண்டிருந்தது. உண்மையிலேயே காந்தாமணியின் அழகில் மயங்காதவர்கள் யாருமே இல்லை. அக் கச்சேரிக்குச் சென்றிருந்த பிராமணன் றுத் தாசி மீது காதல் பூண்டு, கோயில் குருக்களின் உதவியைக் கொண்டு சினேகமும் பெற்று அவளே கதியென, பெண்டாட்டியை விட்டு, இருந்தார்.

கொஞ்சகாலத்தில் அத்தாசி, இவனுடைய சொத்துகளெல்லாம் அழியவே, வெறுக்கத்தொடங்கி, விட்டைவிட்டும் துரத்தி விட்டாள். வீடுசென்று, மனைவியிடம் மன்னிப்புக் கேட்காத முறையில் அழுதான். புரண்டான். மகா மேதையான அவன் மனைவி சிறிதும் கோபிக்காதவளாய் அவனை வரவேற்ருள். விதியின் வசத்தால் இவனை நோயும் வருத்தி படுக்கையில் கிடக்கச் செய்து விட்டது.

நிற்க, இவர்கள் இல்லத்திற்கு ஒரு ரிஷி வந்திருந்தான். நோயுற்றதைக் கண்டு மந்திரம் செபித்து நீர் ஒரு செம்பில் கொடுத்து அருந்தி வரச் சொன்னார். காலச்சக்கரம் சுழல அப் பிராமணன் உயிர் நீத்தான். உத்தமமான அம்மாதும் உடன் கட்டை ஏறி உயிர் நீத்தாள். அப்பிராமணன் தான் நீ; புண்ணிய நீரை உட்கொண்டதால் எனக்கு பாதரக்ஷை தானம் செய்ய எண்ணம் உண்டாயிற்று" என்ருர். வேடன் மெய்சிலிர்க்க இவ்வழிப் போக்கன் கூறியதைக் கேட்டு கண்ணீர் பெருக நின்று கொண்டிருந்தான். மேலும் அவ்வழிப் போக்கன் கூறியதாவது "வேடா! க்ருணி மாமுனிவர் இக் காட்டில் தவம் செய்து கொண்டிருக்கிருர் அவர் தவ மகிமையால் அவர் கண்களினின்றும் வீர்யம் பெருகும். அதை ஒரு ஸர்ப்பம் விழுங்கும். அது ஒரு குழந்தையை பெறும். அவன் உலகம் போற்றும் உத்தமனுவான்;' என மொழிந்து மறைந்தார். வேடன் திடுக்கிட்டு, பின் ஒன்றும் தோன்ருதவனாய் சென்று, சில காலம் கழித்து வேடஜன்மத்தை விட்டொழிந்தான்.

பெரும்புயலுக்குப் பின் அமைதி. காட்டில் க்ருணி மாமுனிவர் கண்களின்றும், பெருகிய வீர்யத்தை ஸர்ப்பம் விழுங்கி ஒரு குழந்தையை பெற்றுவிட்டுப் போய் விட்டது.

தற்செயலாக வந்த வேடர் தலைவன் இக்குழந்தையை எடுத்து வளர்த்து சகல பயிற்சிகளிலும் வல்லவனுக்கி வளர்த்து வந்தான். வேடர் தலைவன் இறக்கவும், இவ்வாலிப வயதுடைய வேடன் காட்டின் ராஜா போல சகல சௌகரியங்களுடன் வசித்து

வந்தான். தன் குலத்தொழிலான வழி பறித்தலிலும் தேர்ச்சி யடைந்திருந்தான்.

ஓர் நாள் அவ்வழியே, ஏழு பெரியோர்கள் சென்று கொண்டிருந்தனர். இவ்வேடன் அவர்களை மறித்தான். அதற்கு அப் பெரியோர்கள் இவனை நோக்கி, "ஏன், எங்களை கொள்ளையடிக்கிருய்?" என்ருர்கள்.

வேடன் "நானே ஏழை, என் மனைவி, பிள்ளைகளைக் காப்பாற்ற பொருள் வேண்டாமா? எனக்கு மாத்திரமா? எல்லாருக்கும் (மனைவி, பிள்ளைகளை) தான் இதில் பங்குண்டு" என்ருன்.

பெரியவர்: இப்பாபத் தொழிலில் உண்டா பங்கு? உன் மனைவிக்கு என்று கேட்டுவா. நாங்கள இங்கேயே இருக்கிருேம் என்ருர். பின்னர் வேடன் மனைவியிடம் சென்று கேட்க, மனைவி, சொத்தில் பங்குண்டே தவிர பாபத்தில் பங்கில்லை என்றதைக் கேட்டு இவர்களிடம் திரும்பி, நடந்ததைக் கூறி ஞான மார்க்கத்தை உபதேசிக்க வேண்டினன்.

அவர்கள் "மரா" என்ற பதத்தை உபதேசித்து சென்றனர். இவ்வேடன் மன உறுதிகொண்டு இப்பதத்தையே உச்சரித்துக் கொண்டு தவம் செய்யலானுன். வெகு காலம் அப்படியே இருந்தபடியால் அவன் மீது புற்று மூடி விட்டது.

* * *

பிரம்மா மூலமாக நாரதர் ராம கதையைத் தெரிந்து, இப் புற்றினருகே வந்து, "ஏ வால்மீகி! நீ வான்மீகத்திலிருந்து (கறையான் புற்றிலிருந்து) வந்ததால் உமக்கு இப்பெயர் உலகம் உள்ளளவும் நிலைத்து நிற்கும். நீர் நான் சுருங்கச் சொல்லுகிற கதையை உலகுக்கு அளியும்" என மொழிந்ததை, புற்றிலிருந்து கிளம்பிய (வேடன்) ரிஷி கேட்டு, பிரம்மாவின் அருளால் சுலோகம் பாட அருள் கிடைத்து, நாரதர் கூறியதை, விரிவாக்கி, ஒப்புயர் வற்ற இராமாயணத்தை உலக மக்கள் உய்விக்கும் பொருட்டு உவந்தளித்து உத்தமன் திருவடியாகிய இணையிலா பேரின்பத்தை எய்தினர்.

## புதிய ஜீவிய சந்தாதார்

இவ்வாண்டு நமது "ஆனந்தபோதினி"க்கு, திண்டிவனம், ஓமண்டூர், கோவடி கிராமத்தைச் சேர்ந்த ஸ்ரீ C. லோகநாதன் அவர்கள் ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்துள்ள நற்செய்தியைப் பெரு மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்ளுகிருேம். நம் "ஆனந்தனை" ஆதரவு செய்யும் நோக்கத்துடன் ஆயுட் சந்தாதாரராக முன் வந்த ஸ்ரீ C. லோகநாதனுக்கு நமது மனப்பூர்வமான நன்றி யறிதலைச் செலுத்துவதோடு, அவரது உதாரணத்தை மற்ற அன்பர்களும், செல்வர்களும் பின் பற்றுவார்களென்று நம்புகிருேம்.

ஆசிரியர்.

# பாலின் பெருமை

(வி. சங்கரய்யர்)



நம் தேசத்தில் பெரும்பாலோர் மாமிசம் உண்பதில்லை எனலாம். ஆகையால் அந்த நன்மையை செய்யக் கூடிய வேறொரு ஆகாரம் உட்கொள்ள வேண்டியது அவசியம். மாமிசத்திலுள்ள பிசிதத்தைவிட மேலான குணத்தைக் கொடுக்கக்கூடிய பிசிதம் பால் ஒன்றில்தான் இருக்கிறது. ஆகையால் இந்தியாவில் கசாப்புக் கடைகளைவிட பால் பண்ணைகளே அதிகம். இதற்கு நாம் அதிக ஆதரவு அளிக்கவேண்டியதும் அவசியம்.

“நாம் மாமிசம் புசிப்பதை அடியோடு விட்டு விடலாம், ஆனால் நாம் பாலைக் குறைக்கக்கூடாது” என்று மங்காலம் என்ற அமெரிக்காவிலுள்ள உணவுமுறை நிபுணர் கூறுகிறார். அமெரிக்காவில் சராசரி ஒரு நபருக்கு ஒரு வருஷத்தில் 55.3 காலன் பால் உபயோகிக்கிறார்கள். ஆனால் நம் தேசத்திலோ 6.5 காலன் தான் சராசரி கிடைக்கிறது. வித்தியாசத்தைப் பாருங்கள். தினம் 3 ஔன்ஸ் பால் கூட இல்லை.

“வளருகின்ற பிள்ளைகளுக்கு பால் அவசியம் வேண்டும் என விஞ்ஞான சாஸ்திரிகள் கூறுகிறார்கள். இளவயதில் போஷணையுள்ள ஆகாரம் புசித்தால் தான் தேகக்கட்டு விடாமல் இருக்கும். என்னுடைய தேசத்தில் நடந்த சோதனையைக் குறித்து கொஞ்சம் சொல்லுகிறேன். விஞ்ஞான சாஸ்திரிகள் சில வளரும் பிள்ளைகளுக்கு சாதாரண சாப்பாட்டோடு தினம் ஒரு ‘பைண்ட்’ பால் கொடுத்து வந்தார்கள். சாதாரணமாக 3.85 ராத்தல் நிறையும், 1-84 அங்குலம் உயரமும் அதிகப்படும். ஆனால் பால் குடித்த வருஷம் 6.98 ராத்தல் நிறையும் 2-63 அங்குலம் உயரமும் அதிகப்பட்டது” என நமது வைஸ்ராயாக இருந்த லின்லித்கோ பிரபு சிம்லாவில் ஒரு தடவை உபந்யாசம் செய்தார்.

நம்முடைய முதல் ஆகாரம் பாலே. அதிலிருந்தே தான் நமது வாழ்க்கையை ஆரம்பிக்கிறோம். அதுவே, சிசுவின் ஆரம்ப பூரண ஆகாரம். மிருகங்களுக்கும் ஆரம்ப ஆகாரம் பாலே. பாலின் மஹிமைதான் என்ன? தாய்ப்பாலுக்கு அடுத்தபடியாக் பசுவின் பால் ஆட்டின் பால் இவைகளேயாகும். ஆகையால் “வருஷா வருஷம் பால் உற்பத்தியை அதிகப்படுத்தவேண்டும். பொதுஜன ஆரோக்கியம் அதைப் பொறுத்திருக்கிறது.” என சர் ராபர்ட் மக்காரிசன் என்பவர் கூறுகிறார்.

பாலெல்லாம் பாலல்ல. நன்றாக போஷித்து வளர்க்கப்பட்ட பசுவின் பாலும், சுயேச்சையாக மேய்ந்துவரும் வெள்ளாட்டின் பாலும் நல்ல போஷண குணமுடையது. பாலை காய்ச்சுவதால் சில போஷணை சத்துக்கள் கெடுகின்றன. ஆனாலும் காய்ச்சிக் குடிப்பதே உசிதம். ஆவியில் சூடாக்கிக் குடிப்பது மிகவும் சிலாக்கியம். பாலிலே சர்க்கரை சேர்க்கக்கூடாது. ருசிக்காக்

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")



(சென்ற இதழின் தொடர்ச்சி)

இவ்வாறு எழுதிய பாக்களை திரு ஆரியநாயகம் பார்த்தார். அவர் மனம் சோகத்தின் உச்சநிலையை எய்தியிருக்கவேண்டும். சில நிமிடங்கள் அப்படியே கல்லாய்ச் சமைந்து விட்டார் அவர். பிறகு நாங்கள், அவரிடம் விடைபெற்றுக் கொண்டு திரும்பினோம்.

சேவா கிராமத்தில் எல்லாம் பார்த்தோம். இனி மகிளாசிரமம் எவ்வாறு நடைபெறுகிறது என்று பார்ப்போம.

### மகிளாசிரமம்—மகளிர் நிலையம்

மகிளர்சிரமம் மங்கையர்க்கென்றே அமைக்கப்பட்டுள்ள ஒரு கழகம். அது மகன்வாடி—சேவா கிராமத்துப் பாதையில் வார்தா நகரின் கீழ்க்கோடியில் அமைந்திருக்கிறது. இங்கு மகளிர்க்கான வகையில் கல்விமுறை வகுக்கபபட்டு. ஆசிரியர்: காகா கலேல்கர் தலைமையில் நடைபெறுகிறது. இங்கே பயிலும் மாணவிகள், நாட்டின் எல்லா மாகாணங்களிலும் இருந்து வந்துள்ளார்கள். அவர்கள் பேசும் மொழிகள் பலவகைப்பட்டவையாகும். உதாரணமாக, தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம், மகாராஷ்டிரம், கூர்ஜ்ஜரம், சிந்தி, குருமுகி, ஹிந்தி, வங்காளம், ஒடியா ஆகிய இத்தனை மொழி பேசுவோரும் அதில் பயில்கின்றார்கள். மொழியைப போன்று, அவர்கள் சமயக் கொள்கைகளும் பல தரப்பட்டன-இந்து, இஸ்லாம், கிருஸ்துவம், ஜெயினம், சிக்கியம், பாரசீகம்.

இந்த மகிளர்சிரமம், சுமார் ஆறு ஆண்டுகட்கு முன்னர் கைம்மை பூண்டோர்க்கும், ஆதரவற்றோர்க்குமே முதலில் அமைக்கப்பட்டது. ஆனாலும், நமது நாட்டில் தொடங்கும் எந்தப் பொதுக் கழகங்கட்கும் நேரும் பணமுடை இக்கழகத்தையும்

---

சேர்ப்பது தேகத்துக்கு அதிக கெடுதலைச் செய்கிறது. பாலை வேகமாகக் குடிக்கக்கூடாது. உமிழ்நீரோடு சேர்த்து சாப்பிட்டாலே ஜீரணமாகும். அதனால் மெதுவாகவே அதைக் குடிக்க வேண்டும். மரக்கறி உணபவர்கள் தினமும் பால் குடிக்க வேண்டியது மிக அவசியம். நம் முன்னோர்கள் நம்மை பால் சாப்பிடும் படிக்கும், அதற்கு காரணமாகவுள்ள பசுவினிடத்தில் தெய்வங்களெல்லாம் இருபபதாகக் கூறி அதை நன்கு சுத்தமாகவும் நன்ருகவும் பாதுகாக்கும்படிக்கும் நம்மை ஆக்ஞாபித்திருப்பதில் ஆச்சரியமொன்றுமே யில்லை.

விட்வில்லை. அடிகள் உள்ளிட்ட எல்லோருக்குமே இக்கழகம் இறந்துபடுமோ வென்று அஞ்சினர். இங்கிலேயில் ஆதரவற்ற இந்திய மகளிர் உலகிற்குத் தம்மை ஒப்படைத்துக்கொண்டு, தியாகவாழ்க்கை நடத்திவந்த மாளவநாட்டு மங்கை யொருவர்க்கு இச்செய்தி எட்டியது. இவ்வம்மையார், திரு. ஜம்னலால் பஜாஜ அவர்கள் சுற்றமாவார். இவரும் கைம்மை நோன்பு நோற்பவர். இவர் இச்செய்தி கேட்டு வார்தா வந்து டி கழகத்தில் தொடர்புடைய எல்லோரிடத்திலும் கலந்து பேசினர். பின்னர் ஐந்து லட்சம் ரூபாய்களை கழகத்திற்கு அளித்தார். அதோடு தாமும் கழகத்து மகளிருடன் இருந்து விடுவதென்று தீர்மானித்து விட்டார்.

இத்தொகையில் ஒன்றரை லட்ச ரூபாய் க்ழகத்திற்கு வேண்டிய கட்டிடங்களுக்கென்று செலவிடப்பட்டிருக்கிறது. மற்றத் தொகையை வைப்பு நிதியில் வைத்து அதில் வரும் வட்டியையும் மாணவிகள் பள்ளிக் கட்டணத்தையும் சேர்த்துக் கழகத்திற்காகும் செலவைச் சரிக்கட்டுகிறார்கள். இப்படியாகும் எல்லாச் செலவும் போக மிகும் தொகையை கழகத்தின் கொள்கையைப் பின்பற்றும் வேறு மகளிர் கழகங்களுக்குத் தந்து உதவப்படுகிறது. நான் கேட்ட ஒரு கேள்விக்கு மகிளாசிரமத்து ஆசிரியர் ஒருவர், "எங்கள் கழகத்தைப் போன்று, பொருளாதாரத்தைப் பொறுத்த வரை வேறு தேசிய ஸ்தாபனம் செல்வாக்குடன் இல்லையென்றே சொல்லலாம்" என்றார்.

மகிளாசிரமம் ஓர் எடுப்பான நிலத்தில் அமைந்திருக்கிறது. ஆசிரமத்திற்கு வேண்டிய அவ்வளவு கட்டிடங்களும் மிக அழகாயும், வசதியாயும் அமைக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, மாணவிகள் தங்கும் விடுதிகள், கலாசாலைக்கென்று பெரிய அழகிய கட்டிடங்கள், மருத்துவ விடுதி, சமையல் விடுதி, தொழுகைக் கூடம், நூல் நூற்கும் விடுதி, குளிக்கும் விடுதி ஆக, இத்தனையும். இவையன்றி ஆசிரியர்க்கட்கும், மற்றச் சிப்பந்திகட்கும் வசதியான விடுதிகளும் அமைக்கப்பட்டுள்ளன.

நானிருந்த அ. இ. கி. கை. சங்கத்தின் மாணவர்க்கட்கான திட்டங்களுக்கும், இங்கே மகளிர்க்காக செய்துள்ள திட்டங்கட்கும் மிக்க வேற்றுமையுளது. இதிலிருந்து வார்தா வட்டாரங்களில் ஆடவரினும், மகளிர்க்கே மிக்க கலைமதிப்பும், கண்ணியமும் காட்டப்பட்டு வருகிறது. இவைகளைக் கண்டேனும் தமிழகத்து மகளிர்க்கு நல்ல நாள் விடியாதா?

வார்தா வட்டாரங்களில் வைகறை 4½-மணிக்கு எழுவது போல். இக்கழகத்திலும் மாணவிகள் துயில்நீத்து எழுதல் வேண்டும். எழுந்தவுடன், தொழுகை பிறகு குளித்தலாகிய காலைக்கடன். காலை யுணவு. ஏழு மணியிலிருந்து 10½மணி வரைக்கும் வகுப்பு. பள்ளியிலிருந்து 10½-க்குத் திரும்பியதும் எல்லோருமாகச் சேர்ந்து சமைக்கவேண்டும். மகன்வாடி வித்தியாலயம்

போன்று இங்கே தவசிப் பிள்ளை கிடையாது. மாணவிகள் தாமே சமைத்துச் சாப்பிடவேண்டும். ஆனால், இவர்கட்குத் துணைபுரிய இரு பணி மகளிரை அமர்த்தியுள்ளார்கள். மாணவிகள் பத்தரை மணிக்கு வகுப்பிலிருந்து திரும்புமுன் இப்பணி மாதர் காய் கறி திருத்திவைத்தல், ரொட்டிக்கு மாப்பிசைந்து வைத்தல், பருப்பு வேகவைத்தல் ஆகியவற்றையமைத்து வைப்பர். மற்ற வேலைகளை மாணவிகள் 12-மணிக்குள் செய்து முடித்து, உண்டு விடவும் வேண்டும்.

பன்னிரண்டு மணியிலிருந்து இரண்டுமணி வரைக்கும் இராட்டையில் நூற்கவேண்டும். இந்த இரண்டுமணி நேரத்தில் ஒவ்வொருவரும் ஒரு சிட்டத்திற்குக் குறையாமல் நூற்றுவிடுகிறார்கள். இந்நூலைக் கழகமே எடுத்துக்கொண்டு கூலி கொடுத்து விடுகிறது. சாதாரணமாய் சிட்டம் 1-க்கு நூற்கும் கூலி முக்காலணா முதல் ஒன்றேகாலணாவரைதான் கொடுக்கப்படும். ஆனால், மகிளாசிரமத்தில் மாணவிகட்கு நூற்கும் தொழிலில் உற்சாக மூட்டவென்றே இரண்டணா கூலியாகக் கொடுக்கப்படுகிறது. இவ்வாறு சேரும் கூலியை மாணவிகளுக்கு மாதம் ஒருமுறை கணக்கிட்டுக் கொடுக்கிறார்கள். அவர்கள் இவ்வாறு நூற்றுப் பெறுங் கூலியைத் தமது விருப்பம்போல் செலவிடலாம் என்னும் தாராளவுரிமையும் அளிக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். அப்படித் தாங்களே சம்பாதிப்பதைத் தாமே செலவிட உரிமை தருவதால் தங்கள் பிற்கால வாழ்வைப்பற்றிய திட்டமும் துணிவும், மாணவிகட்கு ஏற்படத் துணைசெய்வதாகும். மாணவிகள் நூற்றுப் பெறுங் கூலியை சோப், சுநோ, ரிப்பன், தையல், பின்னல் பூவேலையாகியவற்றிற்கான நூல் வகைகளும், மணிவகைகளும் வாங்கவென்றே செலவிடுவதாய்ச் சொல்லப் படுகிறது. இது நிற்க,

மறுபடியும் பிற்பகல் இரண்டு மணியிலிருந்து நான்கு மணி வரையில் மாணவிகட்கு வகுப்பு. அதன் பிறகு, காலையைப் போல் சமைத்தலும், சாப்பிடலும், கோதுமை யரைக்கும் வேலையையும் மாணவிகளேதான் செய்து கொள்ள வேண்டும். இவ்வேலைகள் அனைத்தும் ஒவ்வொரு மங்கைக்கும் வாழ்க்கையில் தேவையான அம்சமாகக் கருதப்படுகிறது. மாலை ஐந்து மணிக்கு எல்லோரும் உண்டபின் அவரவர் விருப்பம்போல் உலவுதல், கதைத்தல், இசைத்தல், நடித்தல் ஆகிய வகைகளில் போது போக்க வசதியுண்டாக்கப் பட்டுள்ளது.

ஆடவர் எவராயினும் தக்க காரணமின்றி மகிளாசிரமத்தின் அருகிலேயும் அணுக முடியாது.

ஆசிரமத்தில் ஹிந்தி மூலம்தான் கல்வி கற்பிக்கப்படுகிறது. மகிளாசிரமத்தில் கல்வி மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இவை எழுத்தறிவித்தலில் இருந்து ஐந்தாவது வகுப்பு வரையுமான தொடக்கக் கல்வி, ஆறுவது வகுப்பிலிருந்து மெட்

ரிகுலேஷன் வரையுமான நடுத்தரக் கல்வி, ஆசிரியப் பயிற்சி ஆக மூன்றுவகை. இம்மூன்றுவகைக் கல்வியையும் முடிக்க முறையே ஈராண்டு, மூன்றாண்டு, ஐந்தாண்டு ஆக வகுத்துள்ளார்கள்.

இவைபோக தையல், பூத்தையல், இசை, ஓவியம் ஆகியவற்றில் சிறந்த பயிற்சியளிக்கப் படுகிறது.

மகிளாசிரமத்தைச் சேர்ந்து பயில விருப்பமுடையோர் அவசியமாய் மனத்தில் பதிக்க வேண்டிய விதிகள் பின்வருமாறு:— அதில் ஜாதிமத வேற்றுமைகள் இருக்க முடியாது. 14 வயது முதல் 35 வயது வரையில்தான் சேர்த்துக் கொள்ளப்படும். உணவும், பள்ளிக்கூட கட்டணமுமாக ஒவ்வொரு மாணவிக்கும் மாதம் 1-க்கு. 15/-ரூபாய்வரை வாங்கப்படுகிறது. உடைபோன்ற இதரச் செலவினங்களை மாணவிகளே ஏற்கவேண்டும். பொன், வெள்ளி, நவமணிகளால் ஆன பணிகள் அணிய அடியுடன் மறுக்கப்படுகிறது. இவை போக ஆசிரமத்தின் மற்றப் பொது விதிகளுக்கு உடன்பட்டு ஒழுக வேண்டும்.

மகிளாசிரமத்தில் பயின்று வந்த சுமார் பதினைந்து தென்னிந்தியரில் மூவர் புகழ்ச்சிக்குரியவராய் விளங்கினார்கள். மூவரும் தனித்தனி வெவ்வேறு கலையில் ஆர்வம் காட்டினர். திரு. அச்சம்மாள் என்னும் கிறிஸ்தவ மாணவி ஓவியத்தில் வியக்கத்தக்க ஆற்றலுடையவரா யிருந்தமையால் மகிளாசிரமத்துச் செயலாளர்களால் ஓவியம் பயிற்றும் ஆசிரியராய் நியமிக்கப் பட்டிருந்தார். மற்றொருவர் இசைக்கலையில் முன்வரக் கூடியவரென்று அறிந்தேன். இருவரும் திருவிதாங்கூர் நாட்டைச் சேர்ந்தவர்கள். இன்னொருவரோ தமிழ் மகள்.

இவர் சொந்த ஊர் மதுரை. மீனாட்சி என்பது அவர் பேர். நான்கு ஆண்டுவரை அலகபாத்தில் தங்கி ஹிந்தி பயின்று விஷாரத் என்னும் சோதனையில் தேறி, பிறகு மகிளாசிரமத்தில் ஆசிரியப் பயிற்சிக்காக வந்திருந்தார். அவர், ஏதோ வொரு புனை பெயருடன், ஹிந்திமொழியில் சிறந்த கட்டுரை யெழுதுவதில் சமர்த்தரென்று சொல்லப்படுகிறது. ஆகவே அவர் உண்மைப் பெயரைவிட புனைபெயரே மற்ற ஆசிரம வாசிகளுக்கு அதிகம் தெரிந்திருக்கிறது. இவருக்கு இருபது வயதுக்குமேல் இராது. எனினும், இந்தச் சிறுவயதில் ஒரு தமிழ் மங்கை, வேற்றுமொழியில் இவ்வளவு புலமையுற்றிருப்பது தமிழர்களுக்குப் பெருமையாகும். இவர் 1942 மார்ச் மாதத்துடன் தமது பயிற்சியை முடித்துக்கொண்டு தமது தாயகம் திரும்பும்போது தமிழர் தமது அரிய மகளை மகிழ்ச்சியுடன் வரவேற்பர்.

## இந்தியப் பாராளும் மன்றம்

வாரதாவில் மற்றொரு முக்கியவிடம் பமாஜ் வாடி என்னும் ஒரு பகுதி. இங்கு திரு. ஜம்னலால் பஜாஜ் அவர்கட்குச் சொந்தமான கட்டிடங்கள் பலவுள. இவைகளில் ஒன்றில் இந்

தியப் பார்ராளுமன்றம் என்னும் அகில இந்திய காங்கரஸ் காரியக் கமிட்டி கூடுவது. இது ஒரு கம்பீரமான மாளிகை. இதையடுத்து விருந்தினர் விடுதி யொன்றும் உளது. காரியக்கமிட்டிக்கு வருகின்ற தலைவர்கட்கெல்லாம் இங்கே உணவுக்கும், இருக்கைக்கும் போதிய வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. இந்த விருந்தினர் விடுதியைச் சேர்ந்த மோட்டாரும் ஒன்றுளது. காங்கிரஸ் தொடர்புடன் வார்தா வரும் எல்லோரையும் அழைத்து வந்து விடுதியில் சேர்ப்பதே இதன் வேலை. ஆகவே இந்த மோட்டார் வண்டி நாளின் பெரும் பாகத்தை ரயிலடியிலேயே நின்று கழிக்கும். இவ்வளவு ஏற்பாட்டிற்கும் காரணமா யிருப்பவர் அந்த நாட்டுப்பித்தர்—கொடையாளி—திரு. ஜம்னுலால் பஜாஜ் ஆவர்.

## வார்தா நகரசபை

வார்தாவிலுள்ள மற்றொரு சிறந்த அம்சம் அவ்வூர் முனிசிபாலிடியாகும். அந்த நகரசபை தன் கடமையைத் திறம்படப் பொறுப்புடன் செய்வதன் மூலம் அங்கு வரும் மற்ற நகர முனிசிபாலிட்டிகளுக்கு ஓர் உதாரணமாய் விளங்குகிறது. அந் நகரில் வீதியைத் துப்புரவு செய்யும் பணியில் ஈடுபட்டுள்ள நகரசபைச் சிப்பந்திகள் காலை 5 மணிக்கே தமது வேலைகளை முடித்துக் கொண்டு போய் விடுகிறார்கள். இதனால் காலையில் எழுவோர் துப்புரவான வீதிகளை காணவும், நல்ல காற்றை உயிர்க்கவும் முடிகிறது.

"வார்தா நினைவுகள்" என்ற தலைப்பின்கண் எழுத வேண்டியவற்றை விடாது எழுதுவதாயின், அது ஓர் பெரும் புத்தகமாக முடியும். ஆகவே, முக்கிய விடங்களையும், அவசியமான நிகழ்ச்சிகளையுமே இதில் எழுதி யிருக்கிறேன்.

முடிவுபெற்றது.

# வீட்டிலேயே நாட்டம்

**(வா. ராமலிங்கம்)**



உலகில் ஒவ்வொரு உயிரினங்களும் தங்கி வசித்தற்கு ஒரு இடத்தை அமைத்துக்கொள்கின்றன. சிற்சில உயிர்கள் புதர், மரம், செடிகளிலும் வசிக்கின்றன இவற்றுள். அறிவு விசேடம் பெற்ற மக்களாகிய நாம் தங்குதற்குரிய பல வசதிகளோடு கட்டி யமைத்துக் கொள்ளுமிடம் வீடு எனப்படும்.

ஒவ்வொருவரும் பொழுது புலர்ந்து கதிரவன் தோன்றியதும் புறத்தே சென்று தத்தம் தொழில் முறைகளைக் கவனித்துக் கருத்துடன் செய்கின்றனர். ஆனல் பொழுது சாயுங்காலம் அதாவது பகற்பொழுது நீங்கினவுடன் வீட்டிற் சேர்வதையே விரும்புகின்றனர். அந்திப்பொழுது கிட்டியதும் தங்களை யறியாமலே மனதினில், 'வீட்டுக்குப்போக நேரமாகிவிட்டது' என்ற எண்ணம் உதிக்கின்றது. இவ்வெண்ணம் எழுந்ததும் முறையே கவனித்துக்கொண்டிருந்த பிற வேலைகளிலும் மனம் சரியாய்ச் செல்வதில்லை. ஏனெனில் தாமிருப்பது உழைக்குமிடம். அந்தியிற் சென்று அமரு மிடமாகிய வீடு அவ்வுழைப்பின் களைப்பை மாற்றி இளைப்பாறி இன்புறுதற்கான இடமாதல் பற்றி என்க.

இவ்வாறே ஒரு மனிதனின் பிறப்பை அவன் வினைவயத் தால் உழைக்கப்புகுந்த புலர்ந்த காலமாகவும் அவனது ஆயுள் முடிவை அவ்வுழைப்பின் முடிவாகிய அந்தி காலமாகவும் கருதலாகும். அப்படிக்கெண்ணுங்கால் பகற் பொழுதில் உழைப்புக்குப் புறம்போந்தவன் எவ்வாறு தனக்குற்ற பணியை வெகு க்வனத்துடன் செய்து முடிப்பனே அப்படியே பிறப்பைப் பெற்ற ஒருவன் அது முடிதற்கு முன் தான் செய்யவேண்டிய கடமைகளைத் தெளிந்து செய்து முடிக்கவேண்டும். ஒருவன் தனது தினத் தொழிற் கடமையை ஒழுங்குறச் செய்தாற்றுன் அதனாலாய ஊதியங் கொண்டு வீட்டில் இளைப்பாறி இன்பமடைகிறுன்: அதுபோன்று வாழ் நாளாகிய நற்பொழுதிற் புரியவேண்டிய கடமையாகிய நல்லறங்கள் நாடி வழுவறச் செய்து புலை, கொலை, களவு தவிர்ந்து நன்னிலைக்கண் நின்றுல் அந்த நற்பொழுதின் அந்திக்காலமான வேளையில் மோட்சமாகிய வீட்டில் நாட்ட மேற்படும். செய்த நல்வினைப் பேற்றுக்கேற்ப அது சித்திக்கும் என்பது ஒரு தலை. சித்திக்கவே மாலைப் பொழுதில் வீட்டி லேற்படும் நாட்டம் மகிழ்வைத் தந்து உழைப்பின் களைப்பை மாற்றுவ தொப்ப மோட்ச வீட்டின் நாட்டம் முட்டின்றிக் கிட்டிய போது பிறப்பிறப்பென்னும் பெருந் தொல்லையாகிய வினைநீங்கி பூரண இளைப்பாறுதலான இன்பநிலை சித்திக்கும்.

**எனவே, வந்த வேலை முடிந்ததும் அந்தியில் வீட்டை நாடுவது போல, நம் வாணுள் முடிவிற்குள் மோட்சமாகிய வீட்டில் நாட்ட**

தொடர் கதை.

# தேவ தேவி

(வத்றுப்-சு. மீ. கணபதி)



(சென்ற இதழின் தொடர்ச்சி.)

அதன் பின்பு என் தாயார் தகப்பனாரை இவ்விடமே அழைத்து வந்து விட்டேன். என் தகப்பனார் பல காலமிருந்து இறந்திருந்தால் எனக்கு மன சமாதானம் ஏற்பட்டிருக்கும். ஆறு மாதங்களே இருந்தார். அவர் இறக்கும்பொழுது மிகுந்த சந்தோஷத்துடனேயே நான் நல்ல நிலைமையி லிருப்பதை அறிந்து சென்றார். அது எனக்குப் பெரிதும் ஆறுதலான விஷயந்தான். என்னையும், சுந்திராவையும் தன் இருகண்களாகவே பாவித்து நடந்து வந்தார். அவர் போன்று இப்பொழுது எனக்குத் துணையாக என் தாயா ரிருக்கிறாள்.

என் தாயாரின் குடும்பமும் சிறிது பணமுடைய குடும்பந்தான். குடும்பநிலையை அனுசரித்து நடந்து வந்தாள். தன் கணவன் சொல்லுக்கு எதிர்பேச மாட்டாள். எங்களுக்கு எது வேண்டுமென்றாலும் தாயாரைத் தான் கேட்கவேண்டும். ஏனெனில், என் தகப்பனார் சம்பளம் வாங்கிய பின்பு ஒரு பைசாகூட எடுத்துக்கொள்ளாமல் என் தாயாரிடமே கொடுத்து விடுவார்; நாங்கள் கேட்கும் சாமான்களை உடனே வாங்கிக் கொடுத்து விடுவார்கள். இன்றுவரை நானும் சம்பளத்தைத் தாயாரிடமே கொடுத்து விடுகிறேன். என் செலவுக்காக மாதம் ஐந்து ரூபாய் கொடுக்கிறார்கள். எனக்குத்தான் செலவு என்ன இருக்கிறது? ஹோட்டல், சினிமா இவற்றிற்கு எப்பொழுதாவது செல்வதற்கு இதனை உபயோகித்துக்கொள்கிறேன் என்பது உனக்குத் தெரிந்திருக்கலாம். எனக்குக் கொடுப்பது போல் சுந்திராவுக்கு மாதம் ஒரு ரூபாய் கொடுத்து வருவாள். அவளுக்குப் பத்து வயதுதானே ஆகிறது. அதற்குமேல் குழந்தைக்குச் செலவு ஒன்றுமில்லை. என் கூட நான் சினிமா முதலியவற்றிற்கு அவளையும் அழைத்துச் செல்வேன். இதுதான் எங்கள் சமாசாரம்.

குழந்தை சுந்திராவைப் பற்றி உனக்குச் சொல்லவில்லையே. அவளுக்கு வீட்டில் சுந்திராம்பாள் என்று பெயர் வைத்தார்கள். இந்தப்

---

முடையவராய் அதை யடைதற்கான நல்லறங்களை உடனே செய்வோமாக.

ஏனெனில், வாழ்நா ளெல்லை இவ்வளவினதென்று யாரும் அறியக்கூடிய தல்லவாகலானும் ஒல்லும் வாயெல்லாம் அறவினை யோவாதே செல்லும் வாயெல்லாம் செய்தல் தகுதி யாதலானும் "காலைச் செய்வோ மென்றதைக் கடைப்பிடித்துச் சாலச் செய்வாரே தலைப்படுவார்" ஆகலானும், "ஒன்றே செய்யவும் வேண்டும், ஒன்றும் நன்றே செய்யவும் வேண்டும், நன்றும் இன்றே செய்யவும் வேண்டும், இன்றும், இன்னே செய்யவும் வேண்டும்" என்பதாலும் என்க.

பெயரை இங்கு வந்த பின்பு நான் சுந்திரா தேவி என அவள் பள்ளிக்கூடத்தில் எழுதிக் கொடுத்திருக்கிறேன். அவளுடைய அழகை உத்தேசித்தும், கால மாறுபாட்டை உத்தேசித்தும் இப்படி மாற்றினேன். அவளுடைய மழலைச்சொற்கள் இன்னும் மாறவில்லை. அடிக்கடி எதைப்பற்றியாவது கேள்விகள் கேட்டுக்கொண்டிருப்பாள். அவள் கேட்பதற்கு நானும் பதில் கூறத் தயங்குவதில்லை. மற்ற விஷயங்கள் உன் அனுபவத்தில் என்னுடன் பழகித் தெரிந்துகொள்ளப் போகிறாய். இதுதான் என் சரிதை" என்பதாக சோமு முடித்தான். இவற்றை சோமு கூறி ஐந்து வருடங்கள் ஆகிவிட்டன என்றாலும், இன்னும் அவன் கூறியது வாசுவுக்கு மறந்துபோகவில்லை.

பத்மாசனியையும், சுவர்ணாவையும் ரயிலேற்றி அனுப்பிய பின்பு எல்லோரும் சோமுவின் வீடு அடைந்ததும், சோமு, வாசுவை நோக்கி, "நீ எப்பொழுது உன் தந்தையை அழைத்துவர உத்தேசிக்கிறாய்?" என்று கேட்டான்.

"என் உடல் நலம் சிறிது குன்றி யிருக்கிறது. இதற்குக் காரணம் தூக்கமில்லாமைதான். நல்ல தூக்கத்திற்கு இன்று மருந்து சாப்பிட்டுப் படுக்கப்போகிறேன். காலையில் பத்துமணிக்குள் எழுந்திருப்பேன் என்ற நம்பிக்கை கிடையாது. அதன் பிறகு நீ எப்பொழுது போகச் சொல்கிறாயோ அப்பொழுதே புறப்படுகிறேன்."

"தூக்கத்திற்கு மருந்து வேண்டாம். நல்ல ஆகாரம் செய்துகொண்டு இங்கேயே படுத்துக்கொள். உன் தூக்கம் நாளை மறுதினம் கலைந்தாலும் அப்பொழுதே எழுந்திரு. தனிமையில் உன் அறையில் படுத்தாயானால் மறுபடி எதையாவது நினைத்துத் தூக்கத்தைக் கெடுத்துக்கொள்வாய்."

"இங்கு தூங்குவதுபற்றி எனக்கு ஆட்சேபமில்லை. சுந்திராவிடம் உத்திரவு வாங்கிக்கொடுத்தால் நான் இங்கு தங்கலாம். இல்லாவிடில் முடியாது."

"புதுமாதிரி பேசுகிறாயே. சுந்திராவிடம் இதைக் கேட்கவேண்டிய அவசியம் என்ன? எதற்கும் அவளைக் கூப்பிடுகிறேன்" என்று அவளை அழைத்தான். "இங்கு வாசு தூங்குவதற்கு உன் உத்திரவை எதிர்பார்க்கிறான். எல்லாம் இனி உன் உத்திரவில் நடைபெறும்போலத் தெரிகிறது."

"அதற்கில்லை சோமு. நன்றாக விடியு முன்னம் கும்பகர்ணப் பட்டம் பள்ளியெழுச்சிப் பாடல் முதலியன சுந்திராவிடமிருந்து புறப்படுகிறது. நான் அதிகநேரம் தூங்குவதற்கு அவள் அனுமதிப்பதில்லை."

"என்னுடைய அனுமதி வேண்டுமா? நான் கூறுகிறபடி செய்வதில்லை. இதற்கு மாத்திரம் நான் எதற்கு? என் பேச்சைக் கேட்டிருந்தால் இன்று அவர்களை ஊருக்கு அனுப்பியிருப்பாரா?",

வேடிக்கை செய்வதற்கு இதுசமயமல்ல."

"வாசு, நீ ஏண்டா அந்தப் பெண்ணை மணந்துகொள்ள மறுத்தாய்? அவள் அப்படி யொன்றும் அவலட்சணமில்லையே."

"காரணம் கேட்கிறாயா? பெண்களைக் காணும்பொழுதே எனக்கு ஒரு விதகிலி ஏற்படுகிறது. மணம் செய்து கொள்வது என்பதையே மறந்து விட்டேன். தவிரவும், நிபந்தனை என்றதும் எனக்கு என்னமோ போலிருந்தது. ஆனால், நான் அவளையாவது மற்றப் பெண்களையாவது வெறுக்கவில்லை. மனம் மறுத்தது. நானும் மறுத்தேன். வேறு காரணம் ஒன்றுமில்லை."

"அப்படியானால் மணம் செய்து கொள்ளாமலே யிருக்கத் தீர்மானித்து விட்டாயா? அது நடைபெறும் காரியமா? வீண் பிடிவாதம் இதெல்லாம். சீக்

ஏரம் மாறி விடும். எவ்வளவு காலம் உன் பிடிவாதம் இருக்கப்போகிறதோ, பார்க்கலாம்'' என்றான் சோமு.

"உங்களுக்குத் தெரிய வில்லை அண்ணா. மணம் என்ற பேச்சை எடுக்கும்பொழுது அதுவும் முதன் முதலில் இவர் முகம் பிரகாசமடைந்தது. காரணம் எதுவோ இருக்க வேண்டும் இவர் மறுத்ததற்கு. நம்மிடம் கூற யோசிக்கிறார். அவர் சமாசாரம் அவர் கும்பகர்ணப்படலத்தில் தெரிந்து போய் விடுகிறது. தவிர, பெண்களைக் கண்டால் கிலி ஏற்படுகிறது என்கிறார். என்னைக் கண்டும் அப்படித்தானிருக்க வேண்டும். அந்தக் கிலியில் ஏதாவது நடந்துவிடப் போகிறது. அவர் கிலி நீங்கியபின்புதான் இனி நான் அவருடன் பேசுவதோ அவரைப் பார்ப்பதோ செய்ய வேண்டும். ஆகையால் எத்தனை மாதங்கள் தூங்கினாலும் நான் எழுப்பப் போவதில்லை. சரி. நான் போய்விடுகிறேன். இல்லாவிடில் கிலி முற்றிவிடும்'' என்றாள் சுந்திரா.

"அம்மா சுந்திரா! எடுத்ததற்கெல்லாம் குற்றம் கண்டுபிடிக்கிறாய். இல்லையென்றால் நகைத்துக் கேலி செய்கிறாய். இதை உனக்கு வரும் புருஷனுடனும் வைத்துக்கொண்டாயானால் அவன்பாடு திண்டாடிப் போய் விடும். நல்ல பெண் அம்மா நீ'' என்றான் வாசு.

"எனக்கு வரும் புருஷனும் பெரிய வாயாடிதான். அது உங்களுக்கெங்கே தெரியப் போகிறது. சாப்பிட வருகிறீர்களா? உறங்கவேண்டுமே நீங்கள். தூக்கத்திற்குத்தான் என்ன மதிப்பு? மூதேவி எனச் சிலர் வெறுக்கிறார்கள். அவளை நித்ரா தேவி எனச் சிலர் போற்றுகிறார்கள். உலகம் பலவிதம். அதில் நீங்கள் ஓர்விதம். நேரமாகிறது, அண்ணா. அவரையும் அழைத்து வாருங்கள். பாவம், சீக்கிரம் உண்டு உறங்கட்டும்.''

"உன் பேச்சுக்கு மறு பேச்சு கிடையாது. ஆனால் எனக்கு அன்னமிட்டால் நீ பட்டினியிருக்க வேண்டியதுதான். நான் வரப்போவது உங்களுக்குத் தெரியாதல்லவா? நான் ஹோட்டலில் சாப்பிட்டு வந்துவிடுகிறேன்'' என எழுந்தான் வாசு.

"உங்களுக்காகச் சமையல் செய்யவில்லை. இருந்தாலும் எல்லோருக்கும் காணும்படி சமையல் செய்திருக்கிறது. அதுவுமில்லையென்றால் நான் பட்டினி இருக்கத் தயார். இதைப்பற்றி உங்களுக்கு ஒன்றுமில்லை. கிலி ஒன்றும் செய்யாது. பிகு செய்யாமல் எழுந்திருங்கள். அந்த மாதிரி பிகு பண்ணும் காலமும் இடமும் வேறு இருக்கிறது'' என்றாள் சிரித்துக்கொண்டே சுந்திரா.

சாப்பிட்டு முடிந்தபின்பு வாசு படுத்துக்கொண்டான். நினைவுகள் பல மனதில் வந்தது. அதை மறந்து தூங்க முயற்சித்தான். அவன் எதிர்பார்த்ததற்கு விரோதமாக காலை ஆறுமணிக்குமேல் அவனுக்குத் தூக்கம் பிடிக்காமல் எழுந்துவிட்டான். சிறிது நேரம் தனக்குக் கொடுக்கப்பட்ட அறையிலேயே உட்கார்ந்திருந்தான். அறைக்கதவைத் திறந்தும் வைத்திருந்தான். சுந்திரா அந்தப் பாதையில் செல்வதைக் கண்டு கூப்பிட்டு பல்துலக்க நீர் கேட்டான். வெறித்துப் பார்த்துக்கொண்டே சென்று விட்டாள். சுமார் அரை மணி நேரம் காத்திருந்தும் தண்ணீர் வர வில்லை.

'நான் எந்த வேலை சொன்னாலும் உடனே செய்பவள் இன்று என்னை ஏன் கவனிக்கவில்லை? என்மீது அவளுக்குக் கோப மிருக்கலாமோ? நான் மறுபடியும் படுத்துத் தூங்கட்டும் என்று எண்ணிப்போயிருப்பாள் என நினைக்கிறேன். எவ்வளவு புத்திசாலியோ அவ்வளவு அசடாகவுமிருக்கிறாள். காரணமின்றிக் காரியம் ஏது? சோமு வந்தாலும் விசாரிக்கலாம். அவன் தான் இன்னும் எழுந்திருக்க வில்லை என நினைத்திருப்பான். நான் அவனைத்

தேடி உட்செல்ல வேண்டியதுதான்' என யோசித்து அறைக்கு வெளியில் வந்தான். சோமுவை அழைப்பதற்கு பதில் வழக்கம்போல் சுந்திரா என்றே தவறி அழைத்து விட்டான். "இப்பொழுது எழுந்து வரமுடியாது. நான் உறங்கவேண்டும்" என்ற பதில் கிடைத்தது. வாசு ஒன்றும் புரிந்து கொள்ள முடியாமல் சோமு என்று அழைத்தான். "அட இடியட், தூக்கம் அதற்குள் கலைந்துவிட்டதாடா? போடா, கதவை மூடிக்கொண்டு மறுபடி தூங்கு" என்ற பதில் கிடைத்தது. 'விபரீதமாக இருக்கிறதே இருவரின் பதிலும்' என்று நினைத்து மறுபடியும், "சோமு இங்கு வாடா" என்றான். சோமுவும் வந்தான். "என்னடா காலை வேளையில் இடியட் என்கிறாய். நான் உறங்கவேண்டும் என்றதற்குத் தண்டனையா இது? சுந்திராவிடம் பல் துலக்க தண்ணீர் கேட்டு அரைமணி நேரத்திற்கு மேல் ஆகிவிட்டது. இன்று புதுமாதிரி இருவரும் நடந்து கொள்கிறீர்களே, விஷய மென்னடா?" என்றான் வாசு.

"விஷய மென்ன என்று கேட்கிறாய்? இன்று என்ன மாதம் என்ன தேதி எனத் தெரியவில்லையா? இன்று சுந்திராவுக்குப் பதினாறு வயது பூர்த்தியாகிறது. அவள் பிறந்த நாள் வைபவத்தில் உனக்காக ஸ்பெஷலாய் ஏதாவது தயார் செய்துகொண்டிருப்பாள். அவளை இங்கு அழைத்தால் அவள் எப்படி வருவாள்?"

"மறந்தே போனேன். அதிருக்கட்டும். நீ எங்கு போய்விட்டாய்? உனக்கு நான் எழுந்துவிட்டதைப்பற்றி சுந்திரா சொல்லவில்லையா? கூப் பிடு அவளை."

"ஏன் நீதான் கூப்பிடேன். நீ எழுந்துவிட்டதாகவும், நீ கூப்பிட்டால் போக வேண்டாமென்றும், அவ்விதம் நான் இங்கு வராமலிருந்தால் மறுபடி நீ தூங்குவாய் என்றும் கூறினாள். அது வாஸ்தவமென்றே யிருந்தேன். நீ விடாகண்டனா யிருந்தபடியால் வந்தேன். இரு உனக்கு தண்ணீர் கொண்டு வருகிறேன் பல் துலக்குவதற்கு" என்று கூறிச் சென்று தண்ணீருடன் வந்து அதை வாசுவிடம் தந்தான்.

"வெறும் தண்ணீரைக் கொண்டு பல் துலக்குவது எப்படிடா? பல் பொடி ஒன்றும் கொண்டுவர வில்லையா?"

"அவர் கேட்டது தண்ணீர் மட்டில் தான். அதைக் கொண்டே அந்த வேலையை முடித்துக் கொள்ளட்டும். பல் பொடி கொடுக்க வேண்டாம்" என்றாள் சுந்திரா உள்ளிருந்தபடியே. "போனால் போகிறான்; இந்தா சீக்கிரம் வேலையை முடித்துவா. காபிக்கு நேரமாகிறது" என்றான் சோமு.

"நான் இன்று காபிக்கு வரமாட்டேன். நீ சாப்பிடு. நான் பேதிக்கு மருந்து சாப்பிட வேண்டும். நாளைக்கு ஊருக்குப் போவதாகத் தீர்மானித் திருக்கிறேன்" என்றான் வாசு.

"என்னடா உளறுகிறாய். இன்றைக்கு எப்படிடா பேதிக்குச் சாப்பிடு வது. உனக்கு இங்கு விருந்து சாப்பாடு இருக்கிறதே."

"நான்கைந்து வருடங்கள் விருந்து சாப்பிட்டிருக்கிறேனே, இதே விசே ஷத்தில். இன்று புதிதாகச் சாப்பிடுவதாயிருந்தால் சரிதான். என்னைக் கட்டாயப்படுத்தினாலும் முடியாது. இன்றைக்கு என்னை மன்னித்துவிடு" என்றான் வாசு.

20/7/04

"மன்னிப்பாவது மண்ணாங்கட்டியாவதுடா. நான் சொன்னால் சொன் னதுதான். சீக்கிரம் பல் துலக்கிவா."

"என்னை வற்புறுத்துவதால் பிரயோசனமில்லை, தயவுசெய்து இன்று என்னை விட்டுவிடு. சுந்திராவும் என்னை மன்னித்துவிடுவாள். அவளிடமே கூறிவிடுவேன். ஆனால், நேரில் வரமாட்டேனென்று புது மனுஷி மாதிரி யிருக்கிறாள். இத்தனை காலமா யல்லாது இன்று அவளும் வேறுமாதிரி இருக்கிறாள். நான் எப்பொழுதாவது மறுத்தது உண்டா என்று யோசித்துப் பார்."

"அதெல்லாம் முடியாது. இது என் உத்திரவு. இன்று விருந்து சாப்பிட்டுத்தானாகவேண்டும். சாக்குப் போக்குகள், மன்னிப்பு இவைகளை ஏற்க நாங்கள் தயாரில்லை. மீறினால் கட்டிப் போட வேண்டியதுதான். கயிறு கொண்டு வரட்டுமா, அண்ணா" என்றாள் சுந்திரா.

"நான் சொல்லவேண்டியதைச் சொல்லியாயிற்று. நான் இனிப் பேச விரும்பவில்லை. அவன்பாடு உன்பாடு. வேண்டுமாகில் நீயே அவனைக் கட்டிப் போட்டுவிடு" என்றான் சோமு.

"வீண் வார்த்தைகள் எதற்கடா. சமயம் சந்தர்ப்பம் தெரியவில்லையே. அவசியம் நான் ஊர் செல்லவேண்டாமா" என்று கூறி கண் சிமிட்டினான் வாசு. சோமுவும் புரிந்துகொண்டு மௌனமா யிருந்தான். வாசு பல் துலக்க திண்ணைக்கு வந்தான். திரும்ப உள்ளே சென்று "இந்தா சோமு, நான் மாலையில் வருகிறேன். வேறு விசேஷ மில்லையே" என்றான்.

சுந்திரா தானிருந்த அறையைவிட்டு வெளியே வந்தாள். "நன்றாக இருக்கிறது நீங்கள் சொல்வது. என் பிறந்த நாள் விருந்தை மறுத்தால் எனக்கு மனக்கஷ்டம் உண்டாகும். நீங்கள் இன்று வெளியே போக முடியாது."

"ஏன் கயிறு கொண்டு வரவில்லையா கட்டுவதற்கு?" என்றான் சோமு, "என்ன அண்ணா கேலி செய்கிறீர்கள்? அவரை நிறுத்தி வைக்க வழி தேடாமல் என்னையே மடக்குகிறீர்களே. உங்களுடைய கடமை யில்லையா இது? நான் சொன்னால் சொன்னதுதான். எங்கும் அவர் போக விடமாட்டேன்.' முடிந்தால் செய்து பார்க்கிறததானே. நீதான் சரியாகப் பேசுவதையும் விட்டுவிட்டாய். ஏதோ புதுப்பெண் மாதிரி நடந்து கொள்கிறாய். நான் சொல்லும் வேலைகள் எதையும் செய்துவந்த நீ இப்பொழுது பேசவும் மறுக்கிறாய். ஆகவே, உன் விருந்திற்கு இன்று நான் இருக்கமுடியாது. வருகிற வருஷம் கண்டிப்பாய்ச் சாப்பிடுகிறேன். நேரமாயிற்று நான் வருகிறேன்" என்று நடந்தான் வாசு. சுந்திரா முன்னால் போய் கைகளால் மறித்துக்கொண்டு "இன்று இங்கு தங்காவிடில் நான் பிறகு உங்களோடு பேசவே மாட்டேன். நான் அழுவேன். இதற்கெல்லாம் சம்மதமானால் நீங்கள் போகலாம். நீங்கள் பத்மாசனியிடம் கூறினது ஞாபக மிருக்கிறதா? ஒரு தீர்மானம் செய்துவிட்டால் அதை மாற்றுவது முடியாது என்றீர்களே. அப்படியே நானும். கவனம் வைத்துக்கொள்ளுங்கள். இப்பொழுது இஷ்ட மிருந்தால் தாராளமாகப் போங்கள். ஆனால் மறுபடி நிச்சயமாக உங்களுடன் பேச மாட்டேன் என்பது கவனத்தி லிருக்கட்டும்" என்றாள். இந்த சந்தடியைக் கேட்டு சுந்திராவின் தாய் அன்னபூரணி வந்தாள். "ஏண்டாப்பா வாசு, இது உனக்கு நன்றா யிருக்கிறதா? சாதாரண நாட்கள் போலவாவது நினைத்து இன்று தங்கி விடு. குழந்தை கஷ்டப்படுவாள். நீ இங்கேயே இருந்து போ. வீணான யோசனைகள் ஒன்றும் வேண்டாம்" என்றாள்.

(தொடரும்)

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியாரமணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா (வ) | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 11 | 26 | 05 | 330 | 19 | 194 | 42 | 60 | 07 | 326 | 41 | 115 | 29 | 303 | 14 | 57 | 13 | 101 | 14 |
| 2 | 11 | 30 | 01 | 331 | 18 | 207 | 20 | 60 | 28 | 328 | 36 | 115 | 24 | 304 | 27 | 57 | 15 | 101 | 10 |
| 3 | 11 | 33 | 58 | 332 | 18 | 219 | 58 | 61 | 03 | 330 | 32 | 115 | 19 | 305 | 41 | 57 | 18 | 101 | 07 |
| 4 | 11 | 37 | 54 | 333 | 17 | 233 | 10 | 61 | 31 | 332 | 29 | 115 | 14 | 306 | 55 | 57 | 21 | 101 | 04 |
| 5 | 11 | 41 | 51 | 334 | 16 | 246 | 23 | 62 | 00 | 334 | 27 | 115 | 09 | 308 | 09 | 57 | 24 | 101 | 01 |
| 6 | 11 | 45 | 47 | 335 | 16 | 260 | 15 | 62 | 28 | 336 | 26 | 115 | 05 | 309 | 23 | 57 | 27 | 100 | 58 |
| 7 | 11 | 49 | 44 | 336 | 15 | 274 | 08 | 62 | 57 | 338 | 25 | 115 | 00 | 310 | 36 | 57 | 30 | 100 | 55 |
| 8 | 11 | 53 | 40 | 337 | 15 | 288 | 44 | 63 | 26 | 340 | 25 | 114 | 55 | 311 | 51 | 57 | 33 | 100 | 51 |
| 9 | 11 | 57 | 37 | 338 | 14 | 303 | 21 | 63 | 55 | 342 | 26 | 114 | 51 | 313 | 06 | 57 | 36 | 100 | 48 |
| 10 | 12 | 01 | 33 | 339 | 14 | 318 | 25 | 64 | 24 | 344 | 27 | 114 | 47 | 314 | 19 | 57 | 40 | 100 | 45 |
| 11 | 12 | 05 | 30 | 340 | 13 | 333 | 29 | 64 | 53 | 346 | 29 | 114 | 43 | 315 | 32 | 57 | 43 | 100 | 42 |
| 12 | 12 | 09 | 27 | 341 | 13 | 348 | 26 | 65 | 22 | 348 | 30 | 114 | 39 | 316 | 46 | 57 | 47 | 100 | 39 |
| 13 | 12 | 13 | 24 | 342 | 12 | 3 | 24 | 65 | 52 | 350 | 31 | 114 | 35 | 318 | 00 | 57 | 50 | 100 | 35 |
| 14 | 12 | 17 | 20 | 343 | 11 | 17 | 40 | 66 | 22 | 352 | 31 | 114 | 33 | 319 | 14 | 57 | 54 | 100 | 32 |
| 15 | 12 | 21 | 17 | 344 | 10 | 31 | 57 | 66 | 52 | 354 | 32 | 114 | 30 | 320 | 28 | 57 | 57 | 100 | 29 |
| 16 | 12 | 25 | 13 | 345 | 09 | 45 | 16 | 67 | 22 | 356 | 29 | 114 | 27 | 321 | 42 | 58 | 01 | 100 | 26 |
| 17 | 12 | 29 | 10 | 346 | 09 | 58 | 35 | 67 | 52 | 358 | 26 | 114 | 24 | 322 | 55 | 58 | 05 | 100 | 23 |
| 18 | 12 | 33 | 06 | 347 | 08 | 71 | 04 | 68 | 22 | 0 | 19 | 114 | 22 | 324 | 09 | 58 | 09 | 100 | 19 |
| 19 | 12 | 37 | 03 | 348 | 08 | 83 | 34 | 68 | 53 | 2 | 13 | 114 | 20 | 325 | 23 | 58 | 13 | 100 | 16 |
| 20 | 12 | 40 | 59 | 349 | 07 | 95 | 32 | 69 | 23 | 4 | 01 | 114 | 18 | 326 | 23 | 58 | 18 | 100 | 13 |
| 21 | 12 | 44 | 56 | 350 | 07 | 107 | 30 | 69 | 54 | 5 | 49 | 114 | 16 | 327 | 23 | 58 | 22 | 100 | 10 |
| 22 | 12 | 48 | 52 | 351 | 06 | 119 | 17 | 70 | 24 | 7 | 30 | 114 | 14 | 328 | 50 | 58 | 26 | 100 | 06 |
| 23 | 12 | 52 | 49 | 352 | 05 | 131 | 05 | 70 | 55 | 9 | 10 | 114 | 12 | 330 | 18 | 58 | 29 | 100 | 04 |
| 24 | 12 | 56 | 46 | 353 | 04 | 142 | 59 | 71 | 26 | 10 | 42 | 114 | 10 | 331 | 32 | 58 | 34 | 99 | 00 |
| 25 | 13 | 00 | 43 | 354 | 04 | 154 | 53 | 71 | 57 | 12 | 14 | 114 | 09 | 332 | 45 | 58 | 38 | 99 | 57 |
| 26 | 13 | 04 | 39 | 355 | 03 | 167 | 03 | 72 | 28 | 13 | 37 | 114 | 08 | 333 | 59 | 58 | 43 | 99 | 54 |
| 27 | 13 | 08 | 36 | 356 | 03 | 179 | 13 | 73 | 00 | 14 | 59 | 114 | 07 | 335 | 13 | 58 | 48 | 99 | 51 |
| 28 | 13 | 12 | 32 | 357 | 02 | 191 | 44 | 73 | 32 | 16 | 11 | 114 | 07 | 336 | 27 | 58 | 51 | 99 | 48 |
| 29 | 13 | 16 | 29 | 358 | 01 | 204 | 15 | 74 | 03 | 17 | 23 | 114 | 06 | 337 | 40 | 58 | 55 | 99 | 45 |
| 30 | 13 | 20 | 25 | 359 | 00 | 217 | 08 | 74 | 35 | 18 | 23 | 114 | 06 | 338 | 54 | 58 | 58 | 99 | 41 |

ஆகாயக் காட்சி:-
9வ இரவு மணி 12-06க்கு சசிக்கு வடக்கில் பா 1-45ல் சுக்ரனும்,
12வ காலை „ 5-50க்கு „ வடக்கில் பா 4-16ல் புதனும்,
17வ „ „ 5-30க்கு „ வடக்கில் பா 2-24ல் சனியும்,
„ இரவு „ 10-30க்கு „ வடக்கில் பா 5-31ல் குஜனும்,
22வ மாலை „ 5-15க்கு „ தெற்கில் பா 0-10ல் குருவும்
சந்திரன் நிற்கும் ரேகாம்சத்தில் வருகின்றன.

பிரவேசங்கள் முதலியன:—17வ இரவு மணி 2-58க்கு புதன் மேஷத்திற்கும், 22வ இரவு மணி 1-09க்கு சுக்ரன மீனத்திற்கும் பிரவேசிக்கின்றன. 17வ புதன் மேற்கில் உதயம். 30வ குரு வக்ரத்யாகம்.

அயனாம்சம் பா-22 கலை-56 விகலை 45·0757 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.
ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

**சுபானு ஸ்ரீ பங்குனிமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1866**
**பசலி 1353, கொல்லமாண்டு 1119, ஹிஜிரா 1363**
**இங்கிலீஷ் 1944 ஸ்ரீ மார்ச்மீ—1944 ஸ்ரீ ஏப்ரல்மீ**

| பங்குனி | மார்ச் ஸ்ரீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | செவ் | சது10-13 | சு16-47 | சி16-47ம | வியாஸராஜ ஸ்வாமிகள் |
| 2 | 15 | புத | பஞ்10-09 | வி18-35 | சித்60 | ரெங்க பஞ்சமி[புண்யதினம் |
| 3 | 16 | வியா | சஷ்8-58 | அ19-17 | சி19-17மி | திஸ்ரோஷ்டகா |
| 4 | 17 | வெள் | சப்7-14 | கே18-23 | ம18-23அ | திஸ்ரோஷ்டகா அஷ்டக சி |
| 5 | 18 | சனி | அ4-13 | மூல17-25 | சித்60 | திஸ்ரோஷ்டா [சிரார்த்தம் |
| 6 | 19 | ஞா | நவ1-12<br>தச56-23 | பூர14-58 | சி14-58அ | அவமாகம், கரிநாள்-சுபம் விலக்க |
| 7 | 20 | திங் | ஏ51-07 | உத்11-27 | ம11-27அ | ஏகாதசி விரதம் |
| 8 | 21 | செவ் | து45-10 | திரு10-24 | சித்60 | மேஷாயனம் நா-05,வி-30 |
| 9 | 22 | புத | திர39-08 | அ4-15<br>சத59-40 | மி4-15<br>சி59-40அ | பிரதோஷம், மாஸ சிவராத்திரி, அவமாகம் |
| 10 | 23 | வியா | சசி33-13 | பூ55-47 | சித்60 | போதாயன அமாவாஸ்யை |
| 11 | 24 | வெள் | ●26-52 | உட்52-12 | சித்60 | அமாவாஸ்யை விரதம்; [யுகாதி பண்டிகை |
| 12 | 25 | சனி | பிர21-35 | ரே48-35 | மி48-35சி | சைத்ர சுத்தம், தெலுங்கு |
| 13 | 26 | ஞா | துதி16-47 | அசு46-13 | சி46-13மி | வேத வியாஸ தீர்த்தம் |
| 14 | 27 | திங் | திரு13-13 | பர44-25 | சி44-25ம | சதுர்த்தி விரதம் |
| 15 | 28 | செவ் | சது10-09 | ❋43-13 | சி43-13அ | கிருத்திகை விரதம் |
| 16 | 29 | புத | பஞ்7-48 | ரோ43-48 | சித்60 | |
| 17 | 30 | வியா | சஷ்6-35 | மிரு45-36 | சித்60 | |
| 18 | 31 | வெள் | சப்7-13 | திரு48-31 | சித்60 | |
| | 1944 ஸ்ரீ ஏப்ரல்மீ | | | | | |
| 19 | 1 | சனி | அ9-07 | புன52-47 | சித்60 | |
| 20 | 2 | ஞா | நவ12-03 | பூச57-35 | சித்60 | |
| 21 | 3 | திங் | தச16-12 | ஆ60-00 | சித்60 | |
| 22 | 4 | செவ் | ஏ20-58 | ஆ3-33 | சித்60 | |
| 23 | 5 | புத | துவ26-23 | மக9-37 | சி9-37அ | |
| 24 | 6 | வியா | திர31-10 | பூர16-12 | சி16-12ம | |
| 25 | 7 | வெள் | சசி35-56 | உத்22-50 | சி22-50அ | பங்குனி உத்திரம் |
| 26 | 8 | சனி | ப○39-35 | அ28-12 | மர60 | பௌர்ணமி |
| 27 | 9 | ஞா | பிர42-07 | சித்32-27 | சித்60 | சைத்ரபகுளம் |
| 28 | 10 | திங் | துதி4-348 | சு35-58 | அ35-38ம | தெய்வகதயான சுபகரங்கள் |
| 29 | 11 | செவ் | திரு44-23 | வி37-48 | ம37-48சி | வாகீச தீர்த்த புண்ய தினம் |
| 30 | 12 | புத | சது43-12 | அ39-09 | சித்60 | ஸங்கட சதுர்தசி |
| 1 | 13 | வியா | பஞ்40-47 | கே38-23 | மி38-23சி | தாரண ஸ்ரீ சித்திரைமீ மேஷ ரவி நா-0, வி-23.7 |

| | | | |
|---|---|---|---|
| சூரி | | சனி | செ |
| புத சுக் | 2-மீன-புத<br>17-மேஷ-புத<br>22-மீன-சுக்<br>30-வ-தியா-கு | | குரு ராகு |
| கே | | | |
| | | | |

**Edited, Printed & Published by N. Munisawmy Mudaliar,**
**At The " Ananda Bodhini " Press,**
**No 6, Lawyer Chinnathambi Mudali Street. Madras.**

# மதன கோலாகல தங்கமாத்திரை

இம்மருந்து தாதுபுஷ்டியைத் தருவதில் நிகரற்றது. இதில் கஞ்சா, அபின் முதலிய லாகிரி வஸ்துக்கள் சிறிதும் சேர்க்கப்படவில்லை. வயது முதிர்ந்த காரணத்தாலும், உலக இச்சை இல்லாதவர்களும் இழந்த பலத்தை



இம்மருந்து ஆச்சரியப்படத்தக்க விதமாக உண்டாக்கி ஒரு விதமான சுறுசுறுப்பையும் கொடுக்கும். இதுவன்றி வேறு எந்த நோயினுலுண்டான பலவீனமும் இம்மருந்தினுல் நீங்கும். இரத்த விருத்தியை யுண்டாக்கி நரம்புகளுக்கு உறுதியைக் கொடுக்கும் தன்மையில் இது கைகண்ட மருந்து. வயோதிகமே தெரியாது. களைப்பும் தோன்றுது. சோர்வையும் சோம்பலையும் நீக்கித் தேக பலத்தைக் கொடுக்கும்.

இது, தங்கம், வெள்ளி, முத்து, அயம், காந்தம் முதலிய உயர்ந்த உலோகச் சரக்குகளும், சஞ்சீவிக்கு நிகரான பல மூலிகைகளும் சேர்க்கப்பட்டு சிறந்த கைபாக செய்பாகங்களாய் தயாரிக்கப்பட்டது.

இதனை ஒரு முறை வாங்கி உபயோகித்தால் இதன் மேலான குணம் தானே தெரியும். 20-மாத்திரைகொண்ட சீசா 1-க்கு விலை ரூபா 2.

# சர்வபடை சம்மாரன்



சரீரத்தின் இடுக்கான இடங்களாகிய துடையின் இடுக்கு, அக்குள், இடுப்பு முதலிய இடங்களில் சிறிது சிறிதாகப் படர்ந்து இரவில் ஓயாத நமைச்சலைத் தந்து நித்திரையைப் பங்கப்படுத்திச் சரீரத்துக்கு அதிக கஷ்டத்தை உண்டுபண்ணும் படைகள், ஒரே தடவையில் இந்தச் சர்வபடை சம்மாரன் என்னும் தைலத்தை உபயோகித்த மாத்திரத்தில் சூரியனைக்கண்ட பனிபோல் ...க்கும்.

புட்டி 1-க்கு விலை அணு 4. தபாற்கூலி வேறு.

# கண்நோய் மருந்து



இது கண்நோய், கண்குத்தல், கூசல், நீர் வடிதல், மங்கல், அந்திமாலை, பீளை கட்டல். சதை வளர்ந்திருத்தல், கண் சிவப்பு, எரிச்சல், கண் இமை புருவம் இவைகளில் வலி, கண் புகைச்சல் இவைகளைக் குணப்படுத்தும். மாணுக்கர்களுக்கும் ஆழ்ந்த பார்வையோடு வேலை செய்பவர்களுக்கும் இது மிகச் சிறந்த ஒளஷதம். இதை உபயோகிப்பவர் கண்ணுடி போடவேண்டியதில்லை.

புட்டி 1-க்கு அணு 10. தபாற்கூலி வேறு.

---

# நாராயண சஞ்சீவித் தைலம்

இத்தைலம் முழுவதும் பச்சிலைகளாலும், பசும்பால் முதலிய சிரேஷ்டமான வஸ்துக்களாலும் ஆயுர்வேத முறைப்படி மிகப் பரிசுத்தமாகத் தயார் செய்யப்பட்டது. இத்தைலத்தில் ஸ்நானம் செய்வதினால் தலைவலி, ஒற்றைத் தலைவலி, மண்டையிடி, மண்டைக்குத்தல், கண் எரிச்சல், கண்களில் நீர் வடிதல், சாலேஸ்வரம், காதுநோய், தலைபாரம், அதிக வெய்யிலினால் உண்டாகும் சிரரோகங்கள், சரீரதாபம், மூளைக்கொதிப்பு முதலியவைகள் ஆச்சரியப்படும் விதமாய்த் தீரும். தொடர்ச்சியாய்ச் செய்துவரும் இதன் ஸ்நானங்களினால் நரைத்த மயிர் கருத்துவிடும். மூளையைக் குளிரப்பண்ணி அறிவையும் திடச் சித்தத்தையும் உற்சாகத்தையும் உண்டு பண்ணுவதில் இது நிகரற்றது.



சாராய சத்து முதலிய ஆங்கில வாசனைகள் இதில் சேர்க்கப்படவில்லை. சுத்தமான பச்சிலை, கிழங்கு புல் முதலிய இந்திய வாசனைகளே சேர்க்கப்பட்டிருக்கின்றன. தினம், இதனைத் தலையில் தடவி வாரி வருவதினால் மயிர் கருப்புப் பட்டைபோல் பளபளப்பாகக் கருத்து ஆலம் விழுதுபோல் நீண்டு வளரும். இன்னும் இது, உஷ்ணத்தைத் தணித்து நூதன சக்தியையும், முகவசீகரத்தையும் உண்டாக்கும். கஷ்டப்பட்டு வேலை செய்தவர்களும் வெகுதூரம் நடந்தவர்களும் படுக்கும்போது சிறிது தைலத்தை உள்ளங்கை உள்ளங்கால்களில் தேய்த்துக்கொண்டால் காலையில் எழுந்திருக்கும்போது தேகம் ஆரோக்கியமாய் இருக்கும். 5 பலம் டின் 1-க்கு ரூபா 1. தபால் சார்ஜ் பிரத்தியேகம்.

## கூந்தல் வளரும் துளி



இதை நல்லெண்ணெய் அல்லது தேங்காய்யெண்ணெயில் கலந்து பிரதிதினம் மயிருக்குப் பூசிவந்தால் கூந்தலானது ஆலம் விழுதுபோல் உண்மையாய் வளரும். அதில் பேன் சேராது: சுண்டு உண்டாகாது; மயிர் உதிராது. வழுக்கை விழுந்த இடத்திலும் மயிர் முளைக்கும்.

புட்டி 1-க்கு அணா 12. தபாற்கூலி வேறு.

# சூதக நிவாரணி மாத்திரை



ஸ்திரீகளுக்கு மாதாந்திர பஹிஷ்டை (ருது) கிரமமாக வெளிப்படாமல் காலந் தவறி வெளிப்படுதல், சிலகாலம் வெளிப்படாமலேயிருத்தல், வயிற்றுவலி, ஜுரம், மார்பு நோய், மயக்கம், கழுத்திசிவு, ஜன்னி தோஷங்கள், மஞ்சட் காமாலை, உணர்ச்சியின்றி சிறுநீர் பெருக்கெடுத்தல், மூர்ச்சையாகுதல், மார்பு படபடவென்று அடித்துக்கொள்ளுதல், மேல்மூச்சு வாங்குதல், மர்மஸ்தானத்தில் பொறுக்கமுடியாத வேதனை உண்டாகுதல் இன்னும் மாதர்களுக்குக் காணும் ருது சம்பந்தமான எல்லா வியாதிகளையும் கண்டித்து கருப்பகோசத்தைச் சரிப்படுத்திச் சந்தான விருத்தியை உண்டாக்கும்.

ஒரு டப்பி மாத்திரை விலை ரூபா 1.

---

**தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்**

# அயத்தங்கத் திராவகம்!

மித்திரர்களே! இந்த அபூர்வ மருந்தானது அநேக கொடிய வியாதிகளை ஆச்சரியமாகக் கண்டிக்கக் கூடியது. இதை அநேக ஆயிரக் கணக்கான ஜனங்கள் உபயோகித்துச் சந்தோஷிக்கின்றனர். வியாதியினாலாவது வேறு எந்தக் காரணத்தினாலாவது இளைத்துப்போயிருக்கும் தேகத்தைப் புஷ்டி யாக்கி பலவிருத்தி தருவதில் இது நிகரற்ற மருந்தாகும். ஆங்கிலேய முறைப்படி தயாரிக்கப்பட்ட அருமையான மருந்து. சாப்பிடுவதற்கு மிக இன்பமாயிருக்கும். இருமல் நோய்கண்டு அவஸ்தைப்படுபவர்கள் இதை உட்கொண்டால் இரண்டே வேளையில் ஆச்சரியமான சுகத்தை யடைவார்கள். இதனால் உண்டாகக் கூடிய அநேக குணங்களில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிக்கிறோம்.



இது, நரைத்த மயிரைக் கருப்பாக்கும், உஷ்ணத்தினாலாவது, புழு வெட்டினாலாவது மயிர் உதிர்வதை நிறுத்தும்: இதனால் நீர் வியாதிகள் தீரும். கண்ணெரிச்சல், கை கால் காந்தல் இவை தீரும். இன்னும் இது முக வசீகரத்தை உண்டாக்கும். தேக அசதியை யோட்டும். ஜீரண சக்தியையும், நல்ல பசியையும் உண்டாக்கும். மனதை அதிக உற்சாகப்படுத்தும், நரம்புகளுக்கு அதிக வலுவைத் தரும், தேகத்தில் நல்ல இரத்தத்தைச் சுரப்பிக்கும், க்ஷயரோகத்தை க்ஷணத்தில் தீர்க்கும், சத்த தாதுக்களுக்கும் நல்ல பலத்தை தரும், மூலச்சூடு, மூலவாய்வு, மலச்சிக்கல் ஆகியவை தீரும்.

இந்தச் சஞ்சீவியை நல்ல போஜனத்துடன் 15 நாள் சாப்பிட்டால் இணையில்லாத ஆனந்தத்தைத் தரும். மனிதர் தாம் இழந்துபோன தேக திடத்தைப் பழையபடி யடைவதற்கு இதைவிட வேறு மருந்தே கிடையாது. ஒருவர் 40-நாள் மருந்தை உட்கொள்ளும் பக்ஷத்தில் அவனுடைய தேகம் வஜ்ஜிரமேயாகும். இதற்கு யாதொரு பத்தியமும் கிடையாது.

20-நாள் மருந்து விலை ரூபா 1. 40-நாள் மருந்து விலை ரூபா 1-12-0.

# நரை மயிர் கருக்குந் தைலம்



தற்காலத்தில் பலவிதமாகச் செய்து விற்கப்பட்டு வருகிற கப்புகள் மயிரைச் செம்பட்டையாகவும், பசுமை நிறமாகவும், சாம்பல் வர்ணமாகவும் ஆக்கி விகாரப்படுத்தி விடுகின்றன. நமது தைலமோ நரைத்த மயிருக்குப் பூசிய 3 நிமிஷத்திற்குள்ளாக நரைப்பதற்கு முன்பிருந்த கருமை நிறத்தையும் பளபளப்பையும் உண்டுபண்ணும், மேலே கூறியுள்ள விகார குணங்கள் இதில் உண்டாகமாட்டா. இதைப் பூசிய பிறகு முகலட்சணமும் வசீகரமு முண்டாகிறபடியால் வயோதிகரும் வாலிபரைப்போல் தோற்றப்படுவார்கள். இதை உபயோகிக்கும் விதம் பார்சலோடு தெரிவிக்கப்படும். இதன் விலை ரூபா 1.

---

லட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

 Regd. No. M. 1190.



Edited, Printed and Published by N. Munisami Mudaliar, at the "Ananda Bodhini Press," No. 6, Lawyer Chinnathambi